# செந்துறை வெண்பா

இயற்றியது

நாச்சி குளத்தார்

இஃது முதுதமிழ்ப் பெரும் புலவர்
சுவாமி ஆ. அ. ப. இராமதாசர் அவர்களால்
பார்வையிடப்பெற்றது.

விற்பனை உரிமை :

பாரி நிலையம்

59. பிராட்வே - சென்னை-1.

முதற் பதிப்பு : மே, 1966.


விலை ரூ. 2-00

ஆசிரியரின் பிற நூல்கள்

பேரின்ப இசைக் கொத்து
திருநெறி 500
அறநெறி வெண்பா
நீதிநெறிச் சாரம்
இன்பரசக் கீர்த்தனைகள்
செந்நெறிப் பாமாலை



கிடைக்குமிடம் :

பாரி நிலையம்

59, பிராட்வே, சென்னை-1.

ராஜன் எலக்ட்ரிக் பிரஸ், சென்னை-1.

# என்னுரை

தமிழ்க் கவிதை மண்டலத்துள் வெண்பாவே பேரொளி காலும் உடுவாகத் திகழ்கின்றதென்பது தமிழ் அறிஞர் கூறும் உண்மையாகும்.

கவிதைகள் பலவற்றைப் பாடிப் பழகிய பின்னர் வெண்பாவும் பாடவேண்டும் என்ற எண்ணம் என்னுள் முகிழ்த்து நின்றது. இது என் தகுதியாலன்று. இறைவனின் திருவுளச் சம்மதத்தினாலேயாகின்றது.

பேரருளால் உலகை நடாத்தும் அவன் பெருமையில் சிந்தை படிந்து நின்ற துணிவால் வெண்பாவியற்ற முயன்றேன். என்னையும் அறியாமல் எழுதிக்கொண்டேயிருந்தேன். நிலைகலைந்து எழுதியவைகளைத் திருப்பி எண்ணிப் பார்க்கின்றபொழுது அவைகள் எண்ணிக்கையில் ஆயிரத்திற்கும் அதிகமாயிருந்தன.

அவ்வாயிரம் வெண்பாக்களே "செந்துறை வெண்பா" என்ற தலைப்பில் தமிழ்ப் பெருமக்கள் முன்னிலையில் படைக்கப்படுகின்றது. என் குரு நாதர் சிவத்திரு இராமதாசர் அவர்கள் நூல் முழுமையும் பார்வையிட்டும் பிழைகளைந்தும் தந்தார்கள். அவர்களுக்கு என் குன்று நன்றி.

இறையருளால் அதி வேகமாக வெளிப்பட்ட இப் பாடல்களை அதிகார அமைப்பின் கீழ் வைக்காது, பல் பொருளும் மின்னும் ஒரு பெரும் படைப்பாக அப்படியே கொடுத்துள்ளேன்.

புலவருலகம் பிழை பொறுத்திடுக; குறை நிறைகாண்போர் எனக்குத் தெரிவித்தால் நன்றியுடையவனாயிருப்பேன்.

இந்நூலை நன்முறையில் வெளியிட்டுத்தந்த பாரி நிலையத்தார் அவர்களுக்கும், கனிவுடன் அணிந்துரை நல்கிய உதயை. மு. வீரையன் அவர்களுக்கும் என்றும் என் நன்றி உரியது.

தங்களின்,

நாச்சி குளத்தார்.

# அணிந்துரை

எந்தமிழின் மிக்க எளிய முறைமையினால்
'செந்துறை வெண்பா'வைச் செய்திட்ட—சிந்தைகவர்
'நாச்சிக் குளத்தா'ரை நாமறிவோம் ; நாடறியும் ;
பூச்சோலைக் குண்டே பொலிவு.

ஒண்டமிழைக் கேட்டே உணர்ந்தவர் ; ஒப்பில்லா
தண்டமிழைத் தாயென்று தாங்குபவர்—கண்டாய்ந்த
இந்நூல் சிறக்க இயம்பினேன் ; என்றென்றும்
செந்நிலை கொள்க சிறந்து.

ஞாலத்தில் ஒப்பற்ற நல்ல பனுவலெனில்
காலத்தை வென்றுமே காட்சிதரும்—கோலத்தால்
புற்றீசல் நூலைப் புகழ்பாட மேம்படுமோ ?
வெற்றியுறு மோகோழை வேல் ?

சூடாத பூமாலை சோர்ந்துதிர்ந்து வாடிவிடும்;
வாடாத பாமாலை வாழ்கவே! —தேடாத
பொய்கையென வாழாது போற்றுகின்ற ஊற்றெனவே
செய்கின்ற நூலே சிறப்பு.

பொன்னுக்குப் பாடிப் புகழ்வாய்ந்த இப்புவியில்
கன்னி முயற்சி கலங்காத—நன்முயற்சி
வெல்க எனவுரைத்து வெண்பாச்செந் தேன்கற்று
நல்தும் பயன்றுய்ப்போம் நாம்.

உடையார்த்தாண்டபுரம்
19-5-'66

அன்பன்,
உதயை. மு. வீரையன்.

அருளாளன் துணை

# செந்துறை வெண்பா

## (முதற் பகுதி)

### காப்பு

ஆதி முதல்வாவுன் ஆன்றசிறப் போதுதற்குப்
போத மருள்செய்வாய் பொதிந்து.

### நூல்

ஏகமாய் எங்கும் இனிதிருக்கும் வல்லோனே
மோகம் முனிந்த முதலோனே—வாகுடனே
பாருலகோர் ஏற்றமுறப் பாடியவெண் பாநூலை
யாருலகும் போற்றிடவே யாள். 1

வெள்ளைமனத் துள்ளொளியை வீறுபெறச் செய்யடியார்க்
கெல்லையிலா வின்ப மியலுமே—அல்லாமல்
ஓடியலை யாயலைவோர்க் கொன்றுமில்லை கண்டறிந்து
நாடிமனத் துள்ளொளியை நாட்டு. 2

ஆனந்த மாயவனை ஆர்வமுட னேதொழுதால்
ஆனந்த மீவான் அருளீவான்—தானிந்த
அற்புதத்தைக் கண்டுவைக்க அட்டியின்றிப் பற்றுடனே
பொற்பதத்தைப் போற்றிப் பணி 3

எங்கும் நிறைந்தவனை ஏகவல்ல நாயகனை
பொங்கும் பெருங்கருணைப் புத்தமுதை—மங்களமாய்
வேண்டுவார்க் கீண்டுயர்ந்த வித்தைபல நத்திவரும்
யாண்டுமிறை தாளே துணை. 4

ஊக்கமுடன் வாழ உலக முனைப்போற்றும்
ஊக்கமின்றி வாழ உணைத்தூற்றும்—நோக்கம்
அறிந்துநலஞ் செய்ய அணைத்திடுவார் மக்கள்
தெரிந்துநட வென்றுந் திரு. 5

மனக்குரங்கைக் கட்டிவைக்கும் வாகறிந்தார்க் கென்றும்
பிணக்கின்றி இன்பம் பெருகும்—கணக்கறிந் (து)
உன்னிப்பாய்க் காத்தோர் உலகத்தில் மேலவர்காண்
எண்ணிப்பார் இன்றேல் இருள். 6

துய்ய மனத்தவரால் தொல்லுலகோர் இன்புறுவர்
வெய்ய மனத்தவரால் வேறடைவர்—மெய்யறிந்து
வாழ்ந்தாலே நன்மைவரும் மாருக நீநடந்தால்
தாழ்ந்தளறு சேர்வாய் ததி. 7

கற்றுணர்ந்து நன்கறிந்து கார்புவியில் வாழ்ந்துவர
உற்றபல மேன்மைகள்தா னோங்குமே—அற்றவர்க்கிங்
கெக்காலுந் தீதுவரும் என்பதனாற் கற்பொழுக்கம்
எக்காலும் போற்ற விசை. 8

நல்லவர்போல் வேடமிட்டு நஞ்சூட்டும் புல்லரிங்
குள்ளராற் கண்டொழுக லுத்தமமே—பொல்லாத
பாம்பின் படவிரிப்புப் பார்த்தவரைக் கொல்லுதற்கே
விம்பரையிங் காண்டல் விதி. 9

திருவாள ரானோர்கள் தெய்வபக்தி நீக்கின்
திருவாள ராமோ தெளிவீர்—திருவாளர்
உண்மைக் குழைப்பார் உயரிறையைப் போற்றிசெய்வார்
நன்மைக்குத் தாயாவார் நாடு. 10

திருடி உடல்வளர்த்தல் சீச்சீ இழிவு
திருடனவென் றூனெறியும் செப்பி—பொருடெறிந்து
கைத்தொழிலும் மெய்த்தொழிலும் கண்டியற்றுமந்நிலையில்
மெய்த்திருதான் மேவி விடும். 11

மன்னர்க் கடங்கிடுதல் மாண்பே பிறகிறைதாள்
சென்னி வணங்கச் சிறப்புறுமே—முன்னி
அறிவைப் பெருக்கும் அழகுமறையோதிச்
செறிவைப் பெருக்கிநெறி சேர். 12

ஓதுவார் பன்னூற்கள் உண்மைநெறி ஒன்றறியார்
மோதுவார் வாய்ச்சொல்லில் மற்றவர்பால்—கோதாரும்
மண்ணுலகில் எக்காலும் மார்தட்டிப் பேசிடுவார்
கண்ணில்லார் எண்ணில்லார் காண். 13

வாழ்க்கையிலே துன்பம் வளரத் தொடங்கிடுமேற்
போக்கதனை மாற்றிப் புலம்பாதே-நோக்கியறிந்
தெந்நாளுஞ் சிந்தித்தே ஏற்றமுறப் பாடுபட
என்னேனுந் துன்பம் இறும். 14

துன்புவருங் காலத்தே சொந்தமெலாம் ஓடிவிடும்
இன்புவருங் காலத்தே ஏறிவரும்-அன்புடையாய்
மானிலத்துச் செய்கையிது மாறின்றி நீயறிந்தால்
மேனிலத்து வாழ்வாம் விழை. 15

கற்றறிந்தார் துன்பநிலை கண்டுசில புல்லர்கரம்
தட்டி நகை செய்வார் தருக்குடனே-கிட்டுபுறங்
குப்பை கிடந்தாலும் கோமே தகம்பெறுமே
தப்பின்றி ஆயிரம்பொன் தான். 16

நல்லுளத்தில் வஞ்சமதை நாட்டாதே நாட்டிவிடச்
செல்வநிலை மாறும் திருவழியும்-புல்லரவர்
கூட்டுறவு மாகும் குடிகெடுக்கு மாதலினால்
நாட்டிவிடு நல்லொளியை நன்கு. 17

கண்ணியமாய் வாழ்வோர் கணக்கில்லாத் துன்பமெலாம்
எண்ணிமகிழ்ந் தேற்பார் இனிதறிவாய்-முன்னைச்
சரித்திரங்க ளோதத் தகுதிவரும் என்றும்
நிறுத்துமனந் தன்னை நிலை. 18

நன்மைபல செய்தாலும் நானிலத்தி லேசிறியோர்
புன்மைசொலி நாளும் புறக்கணிப்பார்-உண்மைதனை
நாயகனே கண்டு நலந்தருவான் என்றென்றும்
நேயமுடன் நன்மைபல நேர். 19

நல்லெண்ணத் தோடு நலமியற்ற மானிலத்தில்
உள்ளெண்ண மோங்கும் உணரப்பா-கள்ளெண்ணங்
கொண்டு கடமைசெயல் கோதாகும் இஃதறிந்து
நன்றுவினை யியற்றி நட. 20

எப்பொழுதும் சிந்தனைகொண் டேற்புடைய செய்திருக்க
ஒப்பப் பலநன்மை ஓங்குமே-செப்பமின்றி
மந்தமுட னேயிருந்தால் வாழ்க்கைச் சகடிவரா
சிந்தனையே செல்வந் தெரி. 21

இன்பம் பெருகியதும் ஏற்றமுளார் நாயகனைக்
கண்பார்ப்ப தில்லை கணப்பொழுதும்-துன்பம்
நெருங்கி நெருக்க நெடுநேரம் போற்றிக்
கரங்கூப்பி வேண்டிடுவார் காண். 22

மக்கள் பிறந்திங்கு மாண்புடனே வாழ்ந்திடுதல்
தக்க நெறியாகும் தானறிவீர்-இக்கருத்தை
நாயன் அறிந்தன்றே நான்மறையைத் தந்துள்ளான்
மாயமின்றி வாழல் வகை. 23

தன்னை அறிந்தோன் தலைவனையும் தானறிவான்
தன்னை யறியான் தடமறியான்-மண்ணுலகிற்
சிந்திப்பார் காண்பார் சிறப்பான நற்கருத்தை
மந்திக்கிங் கேது மதி ? 24

நட்பால் பலதுன்பம் நாடிவந்த போதினிலும்
நட்பாங் கிழமைகெட நாடாதே—உட்பகையில்
சேர்ந்து பழகிடவே செத்துவிடும் நட்புநலன்
மாந்தர் அறிந்தொழுகல் மாண்பு. 25

வாழ்க்கையிலே செல்வ வளம்பெற்று வாழ்ந்தாலும்
போக்கைமறந் தாலலைகை போலாவான்-வாழ்க்கை
அணைக்கலமாய்க் கொண்டிங் கறிவுடனே வாழ
வினைக்கிடமே இல்லை விளம்பு. 26

உதவி புரிந்தோரை உண்மையுடன் நேசி
பதவி உயர்ந்தாலும் பண்போ—டுதவிபல
ஏழைக்குச் செய்தென்றும் ஏற்றமுடன் வாழுவதே
மேலைக்கு நன்றும் விளம்பு. 27

மண்ணிற் பிறந்ததெல்லாம் மாதவங்கள் செய்வதற்கும்
புண்ணியங்கள் போற்றிப் புரியவுமே—எண்ணிலின்றேல்
மானிடரே அல்லர் மணமழுகில் பூவாகித்
தானிகழ வீழ்வார் தரி. 28

புத்தியுடன் வாழப் புகழாகும் வாழ்க்கையறம்
புத்தியுடன் வாழப் புவிபோற்றும்-இத்தரையில்
நன்றறிந்து நன்மைசெய நாயகனும் வாழ்த்திடுவான்
நன்றுணரார் நாடார் நலம். 29

நல்லாள் குடியிருக்க நன்மை மிகுதிவரும்
பொல்லாள் குடியிருக்கப் புன்மைவரும்—இல்லாளைக்
கொள்ளுதற்கு முன்னே குணமறிந்து கொண்டிடுதல்
எல்லார்க்கும் நன்றென் றிசை. 30

ஏட்டுப் படிப்பைமட்டும் எண்ணி மகிழாமல்
நாட்டுப் படிப்பையுமே நாடியறி-சாற்ற
இருவகையுங் கற்றறிந்த போதினிலே நன்றும்
திருநிலையைத் தேறித் தெளி. 31

உன்னை மறந்தே உலகத்தா ரின்துணையை
எண்ணி நடக்கின்றேன் என்தலைவா—என்னை
உனதருளில் வாழ வுவந்தருள்செய் என்றும்
மனதிருளை நீக்கிவகை யாய். 32

யாருக்கு யாருறவு யாருக்கு யார்சொந்தம்
நேருக்கு நேர்சொல்வார் நீள்புவியோர்—சீருக்கு
மாந்தர் உறவெல்லாம் மண்ணிற் சிலகாலம்
ஏந்தல் உறவே இனிது. 33

நல்லவனாய் வாழ நகரே உனைப்போற்றும்
கள்ளவனாய் வாழக் கடிந்துரைக்கும்-வல்லவனும்
நல்லவரின் பக்கமே நாடிநின்று நன்மைபல
உள்ளவரை செய்வான் உவந்து. 34

அறியாமற் செய்த அரும்பிழையை நீக்க
பெரியோ னிடத்திலுண்மை பேசு—தெரிந்தவுடன்
மன்னித்து நல்லருளை வைத்திடுவான் மாட்சியுடன்
எண்ணிச்செய் என்று முயர்வு. 35

பக்தியுடன் பாப்புனைய பார்முதல்வன் அன்புடனே
சக்திதந்து நல்ல தகவளிப்பான்—முக்திபெறப்
பாமாலை சூட்டிப் பரந்தொழுவாய் நன்மனத்துப்
பூமாலை போலாம் புகழ். 36

வேலையின்றிச் சுற்றிநீ வீதிபல போகாமல்
வேலைதனைச் செய்யும் விருப்புடனே—வேலைசெய
எக்காலும் நன்மையடா ஏனோ இதைமறந்தாய்
முக்காலும் தன்முயற்சி மேல். 37

தீயவனாய் வாழத் தெருவெல்லா மேசிரிக்கும்
தூயவனாய் வாழத் துதிபாடும்—நேயமுளாய்
ஏற்றமுடன் வாழ இருவுலகும் நன்மையடா
மாற்றுவழி போகின் வடு. 38

எத்தொழிலைச் செய்தாலும் ஏதுமிழுக் கில்லையடா
அத்தொழிலை நன்றியற்றல் ஆண்மையதாம்—புத்தியிலார்
அங்குமிங்கு மோடி அறிவிழந்து நீதிரிந்து
மங்கிடுவாய் செம்பாய் மதி. 39

ஒருமனதாய் நெஞ்ச முருகி வழிபடவே
திருமனத்திற் றேற்றிடுவாய் தேசாய்—ஒருமனமற்
றன்புடனே வேண்டி யலைகின்றேன் என்னிறைவா!
பண்புடனே காப்பாய் பதிந்து. 40

எக்கல்வி கற்றிங் கிருந்தாலும் நல்லறமாய்
தக்கமுறை வாழார் தரித்திரரே—விக்கிவிக்கி
நீருண்ணு மாப்போல நீயறிவைச் சிந்தித்து
ஊருண்ணும் நல்வழியில் ஓடு. 41

இல்லா ளருகிருந்தே இன்பமுடன் காதலுரை
சல்லாபத் தோடுசொலல் சால்பாமே—கள்ளமனத்
தாயிரஞ் சிந்தையாளை ஆசையுடன் கொண்டுழல்வான்
போயடைவான் மோக்கமெனல் பொய். 42

தன்குணத்திற் கேற்ற தலைவி கிடைத்துவிடின்
இன்குணமாய் யாவும் இயன்றிடுமே—புன்குணத்தாள்
எக்காலு முன்றன் இனத்திற்கே நஞ்சாகும்
தக்காளைத் தேடல் தரம். 43

இல்லாளே நல்லாள் இதையுணர்ந்து மண்ணுலகில்
நல்ல படிநடந்தால் நாணமில்லை—தொல்லைதரும்
மாயக் கணிகையரின் வஞ்சவலை வீழ்ந்தார்க்கிங்
கேயும் பலவசையென் றெண். 44

வெண்பாவிலியற்றி மேன்மைநெறி சொல்லுதற்கிங்
கன்பார் கடலே அருள்தருவாய்—மண்பாரில்
உன்னையே நம்பி உணர்வுடனே வாழுகிறேன்
கண்ணை இமையெனவே கார். 45

கற்றோர் மறைவதற்கு முன்னே கணக்கறிந்து
பற்றாகப் பற்றிப் பலனடைவீர்—கற்றோர்தாம்
போற்றிப் புகழுமொழி பொன்கொடுத்து நீரடைவீர்
ஏற்றுநலம் போற்றிடுவீர் இன்று. 46

மிக்கறிவு இல்லார் விரும்பிச் செயும்பணிகள்
தக்கநிலை காணா தலமறுமே—எக்கணமும்
வல்லான் வகுத்ததே வாய்மையன்றி புல்லறிவோர்
சொல்லால் வடித்ததுவோ சொல் ? 47

பெற்றோர் மனைமக்கள் பேராயம் சுற்றமொடு
மற்றோர் உறவும் மதிபொருளும்—இற்றரையில்
எல்லாம் சிலநாள் இருக்கும் நிலைத்திருக்கும்
வல்லான் தொடர்பே மதி. 48

தத்துவங்கள் கண்டு தரணியிலே வாழ்ந்திடுவார்
உத்தமரே யாவர் உணரப்பா—பத்தரையின்
தங்கம் அவரப்பா தானவரை நீ அணுகிப்
பொங்கும் ஒளிபெறுவாய் போ. 49

ஐம்புலனின் நுட்பமறிந் தாய்ந்திடுவோர் மேலோரே
ஐம்புலனின் நுட்பமறி யார்கீழோர்—வம்புசெறி
சோற்றுடலின் தன்மைகளைச் சோதித்தே வாழ்ந்திடுதல்
ஆற்றலுளார் செய்கை அறி. 50

மெய்ப்புலனைக் கண்டுணர்ந்தோர் விஞ்சையராய் வாழ்ந்திடுவார்
மெய்ப்புலனைக் காணார் விலங்கலவோ—பொய்யுலகில்
கண்டறிய வேண்டுவதைக் காணாக் கடமையப்பா
விண்டவர்சொல் வேதம் இது. 51

**எத்தனையோ மெய்யின்பம் இங்கிருத்தல் கண்டுணர்வாய்**
**அத்தனையும் மேலோனே ஆக்கினவால்—உத்தமர்கள்**
**மெய்யின்பங் காண்பார் விளங்காத மாமடையர்**
**பொய்யின்பங் காண்பார் புரை. 52**

மற்றோர் தமக்கு மதியுரைத்த மாந்தனவன்
உற்றதனை நோக்க உயர்வாகும்—குற்றம்
தனக்குள் இருந்தாலோ தானதனை நீக்கி
மனத்தெளிவைச் செய்தல் மதி. 53

தன்னைப் பெரியனென்று தாரணியிற் கூறிடுவோர்
தன்னை அறியாரே தானறிவீர்—எண்ணுங்கால்
யாரப்பா மேலோர் எவரப்பா கீழோர்
யாரப்பா வேதம் பயின்று. 54

நல்லோர் இறந்திடவே நாடெல்லாந் தானழுகும்
புல்லோர் இறந்திடவே பூரிக்கும்— உள்ளோர்
இதையுணர்ந்தே நற்பணியை ஏற்றமுடன் செய்து
சிதைவகன்று செம்மை பெறு. 55

கற்றிந்த போதும் கணக்கறிந்து வாழாதான்
நற்றிறமை இல்லானே நாடுங்கால்—இற்றரையில்
ஏற்றசெயல் போற்றி இனிமையுடன் வாழ்ந்திடுதல்
சாற்ற இசையுடைத்தே தான். 56

மனத்தை அடக்கும் வலிமைபெறு வாரேல்
குணத்தைப் பெறலாங் குறியாய்—சினத்தார்
துயரடைவர் என்றும் துனியாவில் காணப்
பயனறிந்து வாழப் பணி. 57

இடமறிந்து பேசிடுதல் எக்காலும் நன்மை
இடமறிந்து பேசார்க் கிழுக்கே—தடமறிந்து
சென்றாலே ஆண்டவன்பால் சென்றிடலா மன்புகொண்டு
நின்றாலே வெற்றியதாம் நில். 58

சுறுசுறுப்பாய் இங்கு சுகமுடனே வாழ
விறுவிறுப்புக் கூடும் விளங்கு—கருகருக்க
வெட்டுக்கு நன்மை விளக்கம் தனையறிந்து
ஒட்டி நலங்கண் டுயர். 59

மற்றோர் தனக்கு மதியிழந்து செய்பிழையைக்
கற்றோர் பொறுத்திடுவார் காசினியில்—கொற்றவனும்
மக்கள் பிழைநீக்கி மாண்புடனே காக்கின்றான்
மிக்கோர் அறிவார் விளம்பு. 60

பொய்யுலகை மெய்யென்று போற்றிப் புகழுகிறீர்
மெய்யுலகைப் பொய்யென்று மேவுகிறீர்—ஐயகோ!
ஆவி பிரிந்தால் அரைக்காசும் கூடவரா
பூவி லிதையுணர்ந்து போ. 61

எச்செயலைச் செய்திங் கிருந்தாலும் நன்மனதாற்
சச்சிதா னந்தமெனச் சாற்றுவீர்—கச்சிதமாய்
உள்ளுக்குள் ஜோதி உணர்ந்தாருக் கெக்காலும்
தொல்லையொன்று மில்லை துணி. 62

தக்க சமயத்தில் தானொருபொய் சொல்வதிலோ
சிக்கலொன்று மில்லை தெரிந்திடுவீர்—எக்கணமும்
பொய்சொல்லி வாழப் புனிதமில்லை யாதலினால்
மெய்சொல்லி வாழ்வதுவே மேல். 63

புண்ணியங்கள் செய்து புகழ்மேவி வாழ்ந்திடிலோ
கண்ணியங்கள் பெற்றுக் களித்திருப்பீர்—முன்னோர்கள்
புண்ணியமும் கண்ணியமும் போற்றிசெய வேசொன்னார்
இன்னினிய செய்தல் இசை. 64

நன்னெறிகள் பற்றி நடந்திடுதல் மேலாகும்
புன்னெறிகள் பற்றல் புரையாகும்—உன்னெறியை
நன்மைக்கே நாடி நலம்புரிதல் என்றென்றும்
உண்மைக்குச் செய்யும் உயர்வு. 65

மக்களுடன் கூடியன்பாய் வாழ்ந்திடுதல் மானிலத்தில்
எக்காலும் நன்மையென எண்ணிடுவீர்—மிக்கோனும்
ஒற்றுமையாய் வாழ உதவிகளைச் செய்திடுவான்
பற்றுதலாய் வாழ்வீர் பணிந்து. 66

அற்ப சுகத்துக் கடிமையுள மானிடனே
கெர்ப்ப நிலையதனைக் கேட்டறிவாய்—அப்பவே
நல்லறிவு தோன்றும் நலமாக உன்றனுக்கு
வல்லோன் செயலறிந்து வாழ். 67

செத்தபிணங் கண்டுமனந் தீய்ந்து கலங்கிடுதல்
புத்தியிலார் செய்கை புரியப்பா—புத்தியுளார்
எல்லா மிறைசெயலே என்றெண்ணிப் பக்குவஞ்சேர்
உள்ளங் கசிவர் உவந்து. 68

ஒப்பாரி வைத்தே நான் ஓவென்று கூவியழல்
தப்பாது தப்பிதமே யாகும்காண் —செப்ப
இருப்பவர்க ளெல்லோரும் ஏகனிட மோர்நாள்
திருப்பிவரல் வேண்டுந் தெளி. 69

உள்ளோர் இறந்தால் உளங்கலங்கி வாடாமல்
எல்லா மவன்செயலென் றெண்ணிடுவீர்—தொல்லுலகிற்
செத்தொழியு முன்னே நாம் செய்பணிகள் தானுளது
அத்ததுவே நல்லறமா மாய். 70

உள்ளம் படுகுழியாம் உள்ளிருப்ப தாரறிவார்
எல்லோர்க்கு மொன்றே இருதயமும்—தொல்லுலகில்
நட்பால் அறிவேறும் நாடிப் பெரியோர்பால்
உட்பழக்கங் கொள்வீர் உணர்ந்து. 71

அன்பே உலகத்தை ஆக்குவிக்கும் மாசக்தி
அன்பே உலகாளும் யார்மறுப்பார்?—பண்பறிந்திங்
கன்பின் வழிநின்று யார்க்கும் உதவிசெய்வீர்
அன்பே அகிலத் தரண். 72

உழுகின்ற நாளினிலே ஊர்சுற்றி நின்றால்
விளைகின்ற தென்னே விளம்பு – விளைபுவியில்
வீண்காலம் போக்கி மறலி விழித்தெழுங்கால்
பூண்கோலம் யாதோ புகல். 73

நங்கை அருகுவர நாடிமட நெஞ்சமது
கொங்கை தழுவக் குவிந்தெழுதே—சங்கையுடன்
என்மனத்தைத் தீவழியில் ஏகவிடா தேகாத்து
நன்மையருள் நாயகனே நன்கு. 74

எம்மாதைக் கண்டாலும் ஏற்றமிலா வென்மனது
மெய்ம்மாயை கொண்டு மெலியுதே – சும்மா
இருந்து நலம்புரிந்து இன்னருளை நோக்க
வரந்தந் தருள்நாய கா. 75

மட்டியாய் வாழ மனது துடிக்கிறதே
கெட்டியாய் வாழக் கிருபையருள் – சுட்டியாய்
வாழ்ந்தாலே என்றும் வளங்கெட்டு மாய்ந்திடுமே
ஆழ்ந்துணர நல்லறிவைத் தா. 76

சிற்றின்பம் விட்டுச் சிறப்புறவே எக்காலும்
கொற்றவனே நல்ல குணமருள்வாய்—இற்றரையில்
இல்லாள் தழுவி இனிதுடனே நான்வாழ
வல்லானே செய்வாய் வசிந்து. 77

மதங்கொண்ட யானை மதிமயங்கி வாடும்
மதங்கொண்ட மாந்தன் மடிவான்—கதங்கழிந்து
மாமறையை ஓதி மனிதனென வாழ்ந்துவரத்
தூமறையே போற்றுந் துதி. 78

நாத னருள்நினைந்து நல்ல தவம்புரிவாய்
போதக் குருபரனைப் போற்றி செய்து—வேதமெலாம்
ஓதி உணர்வாய் உருப்படியாய்ச் சேவைசெய்வாய்
மாதிறங்கள் கூடும் மதி. 79

நல்லவர்போல் வேடமிட்டு நன்நடிப்புக் காட்டுகிற
புல்லரையோர் போதினிலும் புல்லாதே—வல்லமைதான்
தோற்றத்தி லும்நடிப்புத் தொய்வினிலு மில்லைமனத்
தோற்றத்தி லுண்டெனவே எண். 80

மாதரவர் நெஞ்சாழங் கண்டறிந்த மாதவரும்
மேதினியி லில்லை விளம்புங்கால்—தீதுள்
நிறைந்திருக்கு மென்றே நெறிநூற்கள் கூறும்
வரைந்தவரைக் குள்ளடங்கு வாய். 81

கண்ணுக்கு முன்காட்டும் கண்ணாடி யைப்போல
முன்னுக்குப் போற்றி முறைபகர்வார்—பின்னுக்குப்
போனவுடன் வஞ்சகமாய்ப் பொய்யுரைத்துப் பேசிடுவார்
வீணே இவருறவு விள். 82

நிறைகுடங்கள் நீர்தளும்ப வில்லையெனக் காணீர்
குறைகுடங்களென்றுங் குதிக்கும் —திரையுலகில்
அந்தரங்கங் கண்டோர் அடங்கி இருந்திடுவார்
இந்தநிலை யார்க்குவரு மெண். 83

கடன்பட்டார் நெஞ்சங் கலங்கிடுமே என்றும்
உடன்பட்டார் நெஞ்ச முதைக்கும்—திடனின்றி
எக்கடனும் வாங்குவதற் கெண்ணாதீர் எப்பொழுதும்
நக்கனருள் வேண்டுவதல் லால். 84

கடமை பெரிதெனவே காசினிமீ தெண்ணித்
திடமுடனே செய்யத் தெரிவீர்—சடமதுதான்
இங்குலவும் போதுநீர் ஏற்றவழி நற்கடமை
மங்கலின்றிச் செய்தல் வனப்பு. 85

நன்றுணரா ரைக்குருவாய் நாடுவதால் என்னபயன்?
குன்றுமுட்டும் புன்குருவை போலாமே—என்றுமே
சற்குருவை நாடிச் சகலகலை தேர்ந்துயர்பின்
இப்பிறப்பில் அஃதே எழில். 86

ஈந்து மகிழ்வோர்க்கிங் கீசன் அருள்புரிவான்
மாந்தருக் கீகை வகைசயகற்றும்—சாந்துணையும்
முன்னின்று காக்கும் முடிந்தபின்பு போற்றிசையும்
கண்ணென்றுன் ஈகைக் கடன். 87

பொங்கிக் குறைகின்ற புத்தாழி நீரதுபோற்
பொங்குங் குறையும் பொருளெல்லாம்—மங்குதற்குள்
தக்கபணி செய்துநல்ல தக்கார்க்கிங் கீந்துவப்பின்
மிக்கநல முண்டு விளம்பு. 88

பெருங்கடலின் ஆழமப்பா பெண்மகளின் நெஞ்சம்
பெருங்கடலா ழங்காணின் பெண்ணின்-கருங்குணத்தைக்
காண முடியாதே காசினியி லெக்காலும்
வீண்செயலை விட்டினிதே மீள். 89

கைத்தொழில்கள் வல்ல கருத்துடைய மக்களையே
வைத்திருக்க வேண்டும் வகையறிவீர்—பைத்தியமாய்
ஊர்சுற்றும் மட்டிகளை ஓடிச் சிறைசெய்வீர்
பேர்பெற்று வாழும் புவி. 90

தோணியுள முள்ளான் துணிந்தறங்கள் செய்யானே
தோணியுள மில்லான் துணிந்தீவான்—வீணில்
மனத்தை அலையவிட்டே மாள்கின்றீர் மாந்தீர்
குணத்தைக்கொண் டேயுயர்வீர் கூர்ந்து. 91

முயற்சி மிகுதியுளான் முன்னேறிச் செல்வான்
முயற்சியிலான் என்றும் முடங்கி—உயர்ச்சியற்று
மண்ணுக்குப் பாரமென வாழ்வான் கதையறிந்து
முன்னுக்கு வந்திடவே முன். 92

செல்வ மிருந்தக்காற் சீருடனே தாள்பணிவார்
செல்வ மகன்றக்காற் சேராரே—நல்விதமாய்
மக்கள் நிலையறிந்து மண்ணின் குணமறிந்து
தக்கபடி வாழ்ந்திடுவீர் தான். 93

எல்லோரும் மண்ணுலகில் என்றும் ஒருகுலமாய்
உள்ளுவந்து வாழ்தல் உயர்வாகும்—கல்லாதார்
சாதி பலவுரைத்துச் சங்கைகெட்டு வாழ்ந்திடுவார்
ஆதி அறியாத தால். 94

நாவடக்க முள்ளோர் நலனடைவா ரெக்காலும்
நாவடக்க மில்லார் நலனடையார்—நாவடக்க
ஈசன் தவழ்ந்திதயத் தென்று மினிதிருப்பான்
தேசுடனே நாவடக்கத் தேர். 95

இரக்க மனதுடையார் என்றும் புவியிற்
சிறக்கப் பலனடைவார் சீராய்—இரக்கமிலான்
வாசனையில் லாமலர்போல் மண்ணுலகில் வீணாகத்
தோசியென வாழ்வான் துடித்து. 96

வஞ்சகத்தாற் தீதியற்றும் மாமூட மானிடர்கள்
பஞ்சையர்க ளாகிப் பரிதவிப்பார்—வஞ்சமிலார்
எங்கும் புகழ்பெருக ஏகன் அருள்மேவி
தங்கம்போல் வாழ்வார் தழைத்து. 97

நன்றி உணர்வதனில் நாயைப்போல் வாழுவதால்
வென்றியுமக் கீவான் விமலனவன் பன்றியென
வாழ்ந்தாலே என்றும் வகைதப்பிப் போய்விடுவீர்
ஆழ்ந்தறிமின் நன்று யதை. 98

பழுத்த பணமுடையோர் பாருலகில் நல்ல
நிலைத்த அறமியற்றல் நேர்மை—உலுத்தமன
துள்ளார்வைத் துள்ளபொருள் ஒன்றுக்கு மாகாதே
முள்ளாற்றுப் பட்ட சுரம். 99

எம்முறையில் நாயகனை எண்ணித் தொழுதாலும்
நன்முறைக ளில்லார்க்கு நன்றில்லை—மும்முறையும்
அன்பொழுக்கம் நல்லறங்கள் ஆற்றுபவர்க் கேஇறைவன்
தண்பதத்தை ஈவான் தக. 100

வல்லானின் சூழ்ச்சிகளை வாதித் தறிந்துணர
எல்லாமும் கைகூடும் இவ்வுலகில்—நல்லார்
சமநிலையிற் சூழ்ச்சிகளைச் சாந்தமுடன் காண்பார்
சமமில்லார் வாதிடுவார் தான். 101

வைத்துள்ள செல்வநலம் மாண்பணிக்கு ஈயார்பின்
வைத்தியனுக் கீவார் வகையாக—பைத்தியத்திற்
கென்னசொல்லி யுந்தேரா தென்பதுபோல் லோபியர்கள்
கண்ணிருந்தும் பாழ்கிணர்வீழ் வார். 102

நன்கவிகள் பாட நலமாகும் மண்ணுலகிற்
புன்கவிகள் பாடப் புரையாகும்—உன்கவியை
எல்லா சமயத்தார்க் கேற்றபடி யாத்திடுவாய்
வல்லார் மதிப்பார் மகிழ்ந்து. 103

ஆதிநிலை காட்டி அவனின் மறைகாட்டி
நீதிநிலைப் பாட்டதனை நினைவாய்—மேதினியில்
புன்கருத்தில் வன்கவியைப் பூரித்துப் பாடுவதால்
நன்கருத்து மாறும் நகைத்து. 104

மங்களமாய் நற்கவியும் மாண்புறவே பாடிசனம்
பங்கமற வாழும் பதமளிப்பாய்—மங்குகவி
யாக்க வினியதமிழ் நன்மையற்ற தாகிவிடும்
நோக்கி நறுங்கவிதை செய். 105

பொங்குந் தமிழ்க்கவிதை பூரணன்மேற் பாடிவிட
சங்கையுடன் வந்தருளைத் தந்திடுவான்—மங்களமாய்
வல்லான்மேல் நற்கவிதை வாரியென நீபொழிவாய்
எல்லா நலம்பெருகும் ஏற்று. 106

சச்சிதா னந்தமெனும் தத்துவத்தின் பேரொளியை
உச்சிதமாய் வேண்ட உயர்வாகும் – பச்சமிலார்க்
கெந்நாளுந் தீதே இயல்பறிந் தின்றுமுதல்
தன்னே ரிலாதவனைச் சார். 107

தாமரைமேல் நீர்த்துளியாம் தாரணியில் வாழ்க்கைநிலை
பூமறையை ஓதிப் புரிந்துகொளும்—நான்மறையில்
நன்னெறியும் நல்வழியும் நாட்டமுடன் காட்டியுளான்
முன்னறிந்து வாழ முனை. 108

மண்ணுக்கு ளெத்தனையோ மர்மங்க ளுண்டறிவீர்
விண்ணுக்குள் ளேயும் விளம்பலாம்—தன்னுக்குள்
வல்லோன் படைத்துள்ள வண்ணமுயர் சூழ்ச்சிகளை
நல்லோர் அறிவார் நயந்து. 109

தன்னை அறியான் தலைவனைஎங் கேயறிவான்
தன்னை அறிந்தோன் தலையறிவான்—புண்ணை
அறிந்தால் அதனில் மருந்திடுவர் ஆர
விரிந்தாலே மேலாம் விடம். 110

துய்ப்பாரே தூயர் துணிவாய் இறையருளை
வைப்பாரே தீயர் மடமைகளை—கைப்பான
தீதியற்றும் மானிடர்கள் சென்றடைவார் தீநரகம்
ஆதியைநல் லோரடைவா ராம். 111

எத்தொழிலைச் செய்திங் கிருந்தாலும் மேலோர்கள்
வைத்திருப்பார் தம்மனத்தை வல்லவன்பாற்—புத்தியிலார்
காசே பெரிதென்று காடெல்லாம் சுற்றிடுவார்
மாசே அவர்வாழ்வு மண். 112

கற்றோருக் கேனோ கடுந்துன்பஞ் சேர்கிறது
மற்றோருக் கேனோ மகிழ்வுறுதல்—கொற்றவா!
உந்தன் திருவிளையாட் டுட்பொருளை யானறியேன்
சொந்தமோ யாதோநீ சொல். 113

மண்ணுலக வாழ்வுதனில் மாண்புடையோர் பட்டதுயர்
எண்ணி லடங்கவில்லை ஏனோதான்—மன்னவா!
கற்றுவல்ல ஆலீம் கருத்துடைய நற்புலவர்
இற்றரையில் துன்புறுவ தேன்? 114

நல்லோர் துயருடனே நானிலத்தில் வாடுகிறார்
கல்லார் மகிழ்ந்து களிக்கின்றார்—வல்லவா!
உள்ளோருக் கெல்லாம் உதவுவது நீயாவாய்
நல்லோருக் கித்துன்ப மேன்? 115

இவ்வுலகில் துன்படைவர் என்னபவஞ் செய்தாரோ
இவ்வுலகில் இன்புறுவார் என்னதவம்—செய்தனரோ
எல்லாம் உமதுசெயல் எல்லாம் உமதுதுணை
எல்லாம் உமதுமய மே. 116

உன்னைத்தான் நம்பி உலகமதில் வாழ்கின்றோம்
உன்னைத்தான் நம்பி உழைக்கின்றோம்—மன்னவா !
எங்கள் குறைதவிர்த் தேற்ற நலமருளி
தங்குமுயர் நற்புகழைத் தா. 117

கையில் உரமும் கருத்தில் புதுத்தெளிவும்
மெய்யதில்நல் லூற்றமுமே வேண்டுகின்றோம் மெய்யாய்த்
தடம்பிடித்துத் தந்து தழைக்கும் வழியை
நடைமுறையி லீவாய் நயந்து. 118

தங்கத்தைப் போலவே தானிருப்பார் மேலோர்கள்
மங்கியசெம் பாயிருப்பார் மற்றோர்கள்—சங்கையறிந்
தின்றே நலன்பேணி ஏற்ற செயல்புரியச்
சென்றடைவீர் நற்புகழ்தோன் றும். 119

என்னேக்க மெல்லாமிம் மானிலத்தோர் நல்வாழ்வை
முன்னேக்கின் காண முயங்குவதே—நன்னேக்கப்
பாடல் இசைத்துப் பரனை வழுத்துவதும்
தோட மகற்றவெனச் சொல். 120

எத்தனையோ மேலாம் இயற்புலவர் பாக்களிலே
பத்திரமாய் நானிருக்கப் பண்ணுவையேல்—வித்தகமாய்ப்
பாமாலை நான்தொடுத்துப் பாங்காய் உனைப்பணிந்து
தேமாவுந் தந்துவைப்பேன் தேர். 121

உள்ளிருக்கும் மாசழுக்கை ஓர்ந்தகற்று மானிடர்கள்
புல்லியராய் மேலழுக்கைப் போக்குகிறர்—வல்லவா !
உள்ளொளிதான் வீறுபெற உள்ளழுக்கு நீக்கணுமே
சொல்லுவதைத் தேர்வார்பார்ச் சொல். 122

கடலுக்குள் எத்தனையோ கண்பொருள்கள் உண்டே
உடலுக்கு மப்படியே ஓதும்—படைப்புலகில்
சித்துக்கு ளெத்தனையோ சீரறிந்தோ ரெத்தனையோ
உத்தமனே நீகாண உன். 123

எம்முறையில் கண்டறிந்திங் கித்தனையு மாக்கினனே
மம்மர் அறுக்கார் மதியறியார்—எம்மானே !
யாவும் அறிந்துணர்ந்தார் யாரிருக்கார் மேதினியில்
தேவும் நரருமெனத் தேர். 124

நன்மைக்கே ஐம்பூதம் நாடிவைத்தாய் என்னுடம்பில்
தின்மைக் கிழுத்தென்னைத் தீய்த்திடுதே—உண்மைக்கே
எக்காலும் நானுழைக்க ஏங்குகிறேன் நல்லிறைவா
தக்கபலந் தந்தாள்வாய் தான். 125

மண்ணுலகும் விண்ணுலகும் மற்றிருக்கும் பல்லுலகுந்
தன்னையறிந் தாரே தானறிவார்—கண்ணில்லார்
யாதும் அறியாரே யாருரைத்துந் தேராரே
தீதுங் குறைப்பாரே தேர். 126

வண்டுமலர் நோக்கிநற வார்த்து மகிழ்வதுபோல்
நன்றே இனிதாய்ந்து நல்லூலைக்—கண்டு
படித்துச் சுவைத்திடுவீர் பண்புடனே நாளும்
அடித்துக் கறப்பதல்ல பால். 127

மந்திரங்கள் கற்று மதியோ டிருந்தாலும்
சிந்தனையால் யாவையுமே தேர்ந்தறிவீர்—மந்தமுளார்
ஈனச் செயலுக்கிங் கெக்காலு மேயோடி
நாணச் சிதைவார் நகை. 128

அடங்கிக் கிடப்போர் அறிவுடையோர் காணில்
அடங்காதார் யாதும் அறியார்—இடங்கண்டு
நன்மைகளைச் செய்வோர் நலன்காண்பார் மாமடையர்
தின்மைகளைச் செய்வார் தினம். 129

கற்றறிதல் ஒன்று கணித்தறிதல் மற்றொன்று
பற்றறிதல் ஒன்றும் பதமறிவீர்—இற்றரையில்
தன்னனுபவங்களிலே தானறியப் பற்பலவாம்
எண்ணியறி வாழ்க்கை இயல். 130

திட்ட மறிவான் திடமுடையான் எக்காலும்
திட்ட மறிவான் திறமில்லான்—மட்டிகளுக்
கெவ்வகையில் நல்லறிவு ஏற்றமுறக் கூறிடினும்
செவ்விநெறி யோராரராந் தேர். 131

இடமும் பொருள்வகையும் ஏவல் வளமும்
நடைமுறையில் நல்லோர் அறிவார்—மடையர்
வகைகெட்டு வாழ்வற்று வாடிநிதம் நின்று
பகையுற்று வீழ்வார் பகர். 132

உண்ணுவது கொஞ்சம் உடுத்தாடை யுஞ்சிறிதே
எண்ணுவது கொஞ்சமல்ல இவ்வுடம்பு—மண்ணுலகோர்
இன்றிருப்பார் நாளை இருளறைக்குட் சென்றிடுவார்
கண்டறியார் மண்டாங் கணி. 133

உருவத்தில் யாவருமே ஒன்றாக உள்ளார்
கருவத்தில் ஒன்றாகக் காணோம்—பெருவுலகில்
நல்லவரையும் பொல்லவரையும் நானறியும் செவ்விதனை
வல்லவா நீதா மகிழ்ந்து. 134

நல்லபடி வாணிபங்கள் நானிலத்தி லேயியற்றி
உள்ளவரை வாழ்வீர் உயர்வாகும்—வல்லானின்
சட்ட மறிந்து தலைவணங்கி எக்காலும்
இட்டமுடன் வாழ்வீர் இசைந்து. 135

மக்கட் சமுதாயம் மாண்புறவே நற்பணிகள்
எக்கணமுஞ் செய்வீர் இதமாக தக்க
உழைப்பினுக் கேற்ற உதவிபல செய்தல்
பிழைப்பை வளர்க்கும் பெரிது. 136

புடமிட்ட பொன்னாகப் பூவுலகில் வாழ
மடர்விட்ட நல்லோரைச் சாரு—இடமறியான்
எப்பலனுங் காணா திருப்பாரே தீதியற்றி
செப்புநெறிக் கேற்றவழி செல். 137

சுற்றும் பொருளெல்லாம் சோதிக்க நல்லபொருள்
வெட்டிப் பொருளெல்லாம் பேய்ப்பொருளே—இற்றரையில்
நற்பணிகள் செய்து நசித்தாலும் மேலவர்கள்
பொற்புறவே போற்றிடுவார் போய். 138

இன்றிருக்கும் நாளை இடமாறுங் காசதுதான்
நன்றறிவார் செய்வாரே நல்லறங்கள்—கொண்டவுயிர்
கூற்றுவன்கொண் டோடுமுன்னே கோதில் அறஞ்செய்யார்
ஆற்றிற் கரைத்தபுளி யாம். 139

நாளையென்று சொல்லி நடத்தாதே காலமதை
நாளை இருப்பதனை யாரறிவார்?—நாளையெனச்
சொல்லியவர் எங்கே? சுருதி இனிதறிந்து
கள்ளமின்றி நற்பணியைச் செய். 140

மண்ணிற் பிறந்தார் மடிவ துறுதிகண்டும்
கண்ணியத்தை ஏனோ கருதாமல்—மண்ணையென
வஞ்சகமும் பொய்களவும் மாகொலையும் செய்கின்றாய்
அஞ்சிநட நெஞ்சே அறிந்து. 141

பயனுள்ள நற்செயலைப் பாரினிலே செய்ய
அயனும் அருகிருந்து காப்பான்—பயனின்றி
ஊர்சுற்றும் நாயாக ஓடியலைந் தாலிங்கே
ஊர்சுற்றும் பன்றியுறு மும். 142

வித்தின்றி ஏது வியன்மரங்கள் மண்ணுலகில்
வித்துவந்த காரணத்தை மேவியறி—அத்ததுதான்
மேல்நிலையில் சேர்க்கும் விளங்காக்கால் மாநரகக்
கீழ்நிலையிற் றள்ளிவிடுங் கேள். 143

கருத்தறியு முன்னே கணக்குடனே வாழ்வார்
கருத்தறிந்த பின்புகடற் பூவில்—சிறுத்தைகளாய்
மாறி மதம்பேசி வம்புபல செய்திடுவார்
சீரில் சிறுநரியாந் தேர். 144

அத்தர் வகைபூசி ஆண்டவனை யேதொழுதல்
புத்தியுளோர் செய்கை புவிமீதில்—புத்தியிலார்
வேசையிடங் கூடிடவும் வெட்டித் தனஞ்செயவும்
பூசுகிறார் அத்தர் புடைத்து. 145

இல்லா ளகத்தில் இனிதிருக்க ஓடோடிக்
கல்லாக் கணிகையரின் கால்வீழ்வார்—தொல்லுலகில்
தேனிருந்தும் பாலிருந்தும் தேரார் மதுவருந்தும்
வீணர்களின் செய்கையென விள். 146

மக்கட் சமுதாயம் மாண்போ டிருந்திடவே
மிக்கறிஞர் எங்கும் விளங்கிடணும்—ஹக்கனே!
நீபுரியுஞ் சூழ்ச்சிகளை நின்றறிவார் மேதினியிற்
றீதறியார் நல்லருளைத் தேர். 147

கற்றறிந்து நல்லடக்கங் கண்டு மகிழ்ந்திருத்தல்
நற்றறிஞர் செய்கையென நன்றுரைப்போம்—மட்டிகளோ
தம்பட்டந் தட்டித் தமுக்கடித்துத் தான்திரிவர்
பண்பட்ட உள்ளமிலார் பார். 148

சாதனை செய்பவரே தானறிவார் ஞானவழி
சாதனை இல்லார் தகுதியில்லார்—போதப்
பழக்கத்தா லெல்லாம் பயின்றிடலாம் நல்ல
வழக்கத்தைக் கொண்டே மகிழ். 149

ஒழுக்க முடையார் உயர்வடைவார் நல்ல
ஒழுக்கமிலார் என்றும் உமியே—பழுத்த
அறிவுடையோர் காண்பர் அருமைநெறி யாவும்
அறிவடையார் காணூர் அதை. 150

பணத்தைச் செலவழிக்கப் பாதிப்பயன் கூடும்
குணத்தைச் செலவழித்தால் குற்றம்—சினத்தைச்
செலவழித்தா லென்றும் சிறுமை அறிந்து
நலத்தகையார் பக்கம் நட. 151

அறிவைச் செலவழிக்க ஆகுமே நன்மை
அறிவைச் செலவழிக்கார்க் காகா—புரிய
உரைத்தாலே காண்பர் ஒழித்தாலோ காணூர்
மறைத்தால் பயனில்லை மண். 152

வறுமைப் பிணியுழந்த மாண்பர் நிலை கண்டு
பெருமையுடன் ஏளனங்கள் பேசி—சிறுமரென
கூடி நகைக்கின்ருர் கூர்த்த மதியில்லார்
பேடியவர் கூறப் பெரிது. 153

என்னதான் கற்றிங் கிருந்தாலும் கையதினில்
பொன்னில்லை என்ருல் புகழில்லை—திண்ணமுடன்
பொன்னே புகழ்சேர்க்கும் போதந் தனைவளர்க்கும்
கண்ணே அனையதிது காண். 154

காசில்லார்க் கெந்நாளும் காணுர் பெருமையிலை
காசுள்ளோர்க் குண்டு கனதனங்கள்—தேசில்லார்
பொல்லா வறுமையுற்ருர் பூதலத்தி லிங்கறிந்து
வல்லாற்ற லாற்பொருள்சேர் மற்று. 155

பெற்ருேர் உவக்கார் பிரியமுள்ளாள் தானுவக்காள்
மற்ருேர் உவக்கார் வறுமையுற்ருல்—இற்றரையில்
செல்வமே எந்நலமும் சேர்க்கு மதனலே
செல்வமே சொர்க்கம் புவிக்கு. 156

நல்லோரைப் பேணிடவும் நட்பினரைக் கண்டிடவும்
பொல்லா வறுமையுற்றேன் புண்படுவான்—நல்லாய்கேள்!
பொன்னின் பொருள்தெரிந்து புத்தியுடன் செல்வமதை
இன்னே நீ தேட விசை. 157

நன்மைபல செய்திடவே நாட்ட மிகவுடையார்
புன்மையரைக் கண்டாற் புலம்பிடுவார்—நன்மையந்தப்
புன்மையராற் துண்டுபடும் போக்கதனால் நீள்பணிகள்
நன்மைக்கே ஊறுதரும் நாடு. 158

வறுமையிலே துன்பம் வரைவின்றி வந்துப்
பொறுமைதனைச் சோதிக்கும் போதே—திறமையுடன்
நெஞ்சுறுதி யோடிருப்பின் நீள்துன்பம் வன்காற்றால்
மஞ்சுபடு பாடாம் மதி. 159

மிக்க உணவருந்த மேவும் உடற்பிணிகள்
தக்க தறிந்துண்ணத் தாவாதே—எக்கணமும்
உண்டால் அளவறிந் துண்க அதுவேதான்
நன்றாம் உடற்கெனவே நாடு. 160

நன்மை கசப்பாகும் நஞ்சோ இனிப்பாகும்
தன்மை அறிந்தோன் தலையாகும்—உண்மைதனை
மண்ணில் வதிகின்ற மாண்பரெல்லாங் கண்டறிந்து
கண்ணியத்தைப் பேணல் கடன். 161

கறுப்பாய் இருதயத்தைக் காலமெல்லாம் வைக்க
உறுப்பழிந்து போகும் உணர்வீர்—சிறப்புக்கு
நல்லோரைச் சார்ந்தும் நலமான நூலறிந்தும்
கள்ளத்தை நீக்கக் கருது. 162

எப்பாடு பட்டுழந்தும் இங்கிருக்கும் மாந்தரெல்லாம்
ஒப்பமுற வாழல் உயர்வாகும்—தப்பிதமாய்
தன்னடக்க மின்றித் தறுதலைக ளாயலைந்தால்
முன்னடக்கும் தீமை முனைந்து. 163

பாதகங்கள் செய்கின்றப் பாவிகளைக் கண்டணுகிப்
போதகங்கள் கூறிப்புரிய வைப்பாய்—சாதகத்தால்
உன்னால் முடியாத தொன்றில்லை ஆதலினால்
கண்ணாக நல்வழியைக் காட்டு. 164

கைகட்டி வாய்கட்டி கண்ணியமுந் தான்கட்டி
மெய்கட்டி வாழ விழையாதே—செய்மட்டி
ஆதலினல் செய்தொழில்கள் அந்தமுற வேபுரிந்தாற்
காதலிப்பான் காரணனுங் காண். 165

பொய்சொல்லி எப்பொருளும் போற்றி விலைகூறப்
பைசாக் கொடுத்தடைவார் பாருலகில்—மெய்சொல்ல
உன்னை வெறுத்திங் கொதிக்கிடுவார் பேதையென
மண்ணுலக வாணிபமி தாம். 166

பிணியுற்ற காலத்திற் பேசிடவே நாணி
இனிவேலை இல்லையென்பார் என்னே—பிணியற்ற
போதுபல வேலைசொல்லிப் பொன்னை மிகப்பெறுவார்
நீதமிலாச் செல்வர் நினை. 167

நல்ல வியாபாரம் நாளும் நடந்தக்கால்
நல்ல மனத்தோடு நம்மிடத்தே—சொல்லி
மகிழ்ந்திடுவார் உள்ளதொழில் மாற்றங்கண் டாலோ
இகழ்ந்திடுவார் நம்மை இடித்து. 168

கண்ணியமாய் மண்ணிற் கணக்கறிந்து வாழ்ந்துவரப்
புண்ணியங்கள் யீவான் புகழீசன்—எண்ணுமல்
ஈனக் கழுதையென இவ்வுலகி லேவாழக்
காணக் கடியுமிறை காண். 169

புத்தியுடன் வாழ்ந்துவரப் போற்றிப் புகழ்ந்திடுவார்
புத்தியின்றி வாழப் புரையுரைப்பார்—நத்தியறிந்
தின்றே திருந்தி இடர்புவியில் வாழுமட்டும்
நன்றே புரிய நலம். 170

பண்பும் பரிவும் படித்துணர்ந்த மாந்தரிடம்
அன்பும் அறமும் அடங்கிநிற்கும்—வம்பர்தமக்
கென்ன இருந்தாலும் எப்பயனு மேயின்றி
விண்ணைப் படும்வாழ்க்கை விள். 171

காவி யுடுத்திநிதம் காடுகரை சுற்றிடினும்
காவிப் பலனுன்னைச் சாராதே—நாவில்
நயனுரைக்கும் சொற்பொருத்தி நாயகனைச் சாரப்
பயனுண்டு என்றும் பணி. 172

உண்டால் உரமாகும் உண்ணுக்கால் என்னுகும்
கண்டால் மகிழ்வாம் நற் காட்சிகளே—நன்றறிந்(து)
ஏற்றபொரு ளுண்ணை இவையும் பலநன்மை
மாற்றமேல் வன்பிணியா மாய். 173

கவிஞர் திருநெஞ்சம் கண்டுணர்ந்து நாளும்
புவிஞர் புனிதமுடன் போற்றிப்—பவிசுடனே
நல்லறிவு நல்லசெயல் நல்லபணி நல்லவுரை
உள்ளவரை கேட்டால் உயர்வு. 174

அறிந்துள்ளோ மென்றிங் ககந்தையுடன் பேசல்
சிறந்த செயலில்லை தேர்வீர்—தெரிந்துயர்ந்த
நன்மைபல செய்து நலமுடனே வாழ்ந்திருந்தால்
உண்மைத் திருவேறும் ஓர். 175

கற்றுயர்ந்த போதும் கணக்கறிந்து பேசிடுதல்
சட்டத்திற் கேற்ற சிறப்பாகும்—திட்டமிலார்
யாதும் உரைத்திடுவார் யாருடனும் மோதிடுவார்
தீதும் புரிவார் தினம். 176

எல்லா மறிந்திங் கிருந்திட்ட போதினிலும்
சொல்லாதே வன்சொல்லை சோர்வுவரும்—அல்லாத
வீண்வாதஞ் செய்து விலங்காய் அலைந்திடுதல்
வாஞ்சையிலார் செய்கை வரை. 177

என்னைவிடக் கற்றோன் எவனுமில்லை என்றுரைத்தல்
மண்ணையரின் செய்கை மதித்திடுவாய்—தன்னைப்
பெரியன் எனவுரைத்துப் பேசார் பெரியர்
அரிய திறமவர்க்கி தாம். 178

கல்வி மிகுத்துக் கடலென வாழ்ந்தாலும்
செல்வங் குறையச் சிறப்பறுகும்—உள்நிலையை
நன்கறிந் தின்றே நலமாய் இருபொருளும்
தன்கையில் நிற்கத் தகும். 179

பாடல் பலபாடிப் பற்றுச் சிறிதுமின்றிக்
காடலைய என்றுங் கருதாதே நாடுறைந்து
நல்லபணி நல்லதொழில் நன்கியற்றி வாழுவதே
விள்ளரிய நற்சிறப்பாம் விள். 180

சொல்லம்பு கொண்டு துரத்தாதே மானிடரை
உள்ளன்பு கொண்டிங் குறவாடு—நல்லன்பால்
பாருலகை நாடிப் பதமுணர்ந்து வாழ்வாயேல்
சீருவருஞ் செம்மைவருந் தேர். 181

நல்லோர் அறிந்திடுவார் நானிலத்தின் வாழ்வுமுறை
புல்லோ ரறிவாரோ பூவுலகை—உள்ளோர்
அறிந்திடாவே மேலாம் அறிவுபல தந்தான்
மறந்திங்கு வாழல் வசை. 182

புண்படுத்துஞ் சொல்லாற் பெரியோரை ஏசாதே
துன்படுத்து வாட்டுந் துரிதமுடன்—நண்பா!
பெரியோரை நாடியவர் பேச்சுநெறி கேளு
அறிவோடு மேன்மை வரும். 183

நெஞ்சில் உறுதியுடன் நேர்மை வழிநடந்தால்
அஞ்சிடுவார் புல்லர் அறிந்திடுவாய்—பஞ்சையர்போல்
ஊக்கமின்றிச் செய்ய உலகோர் இகழ்வாரே
போக்கறிந்து எய்து புகழ். 184

ஆதிப் படைப்பை அறிந்துணர வல்லார்க்குச்
சோதிச் சிறப்பாற் சுகந்தோன்றும்—நீதியுடன்
சிந்தித்தோர் கண்டார் செகத்தின் இரகசியத்தைச்
சிந்திக்கார்க் கேது செகம். 185

ஒன்றை இறைபடைத்த உண்மை அறிந்தவர்கள்
ஒன்றுகுல மென்றிங் குரைத்திடுவார்—நன்றறியார்
சாதிபல சொல்வார் சழக்குரைப்பார் பொய்யுரைப்பார்
நீதிக்கு நீசர் இவர். 186

சொல்லுஞ் செயலும் சுகிர்தமுட ேேனுங்குதற்காய்ச்
சொல்லும் இறைவன் சுருதிகளை—நல்லோர்
மொழிந்தார்க ளஃதால் முழுநன்மை கண்டார்
நலிந்தார் நலம்மறந்த தால். 187

வல்ல இறையவனை மாண்புடனே போற்றிசெய
நல்ல திருப்பெருகும் நாளுளும்—அல்லாக்கால்
பேதமை தோன்றும் பிரியு மறிவழிந்தே
சாதனையும் நீங்கும் தகர்ந்து. 188

கிணற்றுத் தவளைபோற் கேடுமொழி பேசேல்
இனத்திற்கே தீமையை எண்ணும்—குணத்தின்
கடலிறங்கி நல்லக் கருத்தறிந்து பேசல்
அடலேறாய் ஆக்கும் அறி. 189

என்தெய்வம் உன்தெய்வம் என்றிங்கு பேசிடுவோர்
தன்தெய்வங் காணு தவித்திடுவர்—மண்தெய்வம்
ஒன்றெனவே எண்ணி உவப்புடனே பேசிடுவோர்
சென்டாய் நலனடைவார் சேர். 190

நன்னூல் படித்துணர நன்மைபல கண்டிடலாம்
கொன்னே கிடத்தல் குணமாமோ?—எந்நாளும்
ஓதிவரத் தீதொழியும் உள்ளுணர் மெய்விளங்கும்
ஏதுநிகர் கற்றுவல்லார்க் கிங்கு. 191

மக்கள் இறைவனுக்கு மாண்போ டிணைவைத்துத்
திக்கில் வணங்குவது சீரில்லை—மக்கள்
பரம்பொருளை நெஞ்சிற் பணிவுடனே எண்ணிச்
சிரம்பதித்து நற்றொழுகை செய். 192

அருளில்லா நெஞ்சம் அருஞ்சுரமாம் பூவிற்
பொருளில்லா வாழ்க்கை பொடியே— இருளில்
விளக்கின்றிச் செய்கின்ற வேலையது போலாம்
விளக்கமில் நெஞ்சின் விழை. 193

நாட்டிற் பலபெண்டு நாட்டமுடன் கொள்ளுவது
ஏட்டில் உமதுகதை ஏளனமே—நாட்டமுடன்
இல்லாள் எனஒருத்தி இங்குதுணை யாயிருந்தால்
நல்லாண்மை சேர்க்குமென்றே நாடு. 194

இருக்கும் பொருளனைத்தும் ஏமன்றன் முன்னே
சிறக்க அறம்புரிதல் செம்மை—பரக்கவுயிர்
போகாமுன் நல்லறங்கள் போற்றுதார் பெற்றசெல்வம்
வேகா அரிசியென விள். 195

இளமையிலே தீமைபல இன்பமுடன் செய்ய
வளமையற்ற துன்பமுனை வாட்டும் – நிலமைதனைக்
கண்டறிந்து வாழ்தல் கடமையாம் காரணத்தோ
டின்றறிந்து வாழல் இனிது. 196

எண்ணரியாத் துன்பமெல்லாம் ஏற்று நலிந்திடினும்
கண்ணியத்தை நீக்கக் கருதாதே—நன்னயமாய்
வாழின் வகைபிறக்கும் வல்லவனின் றன்னருளாற்
சூழும் பலநன்மை சூழ். 197

கொடிய வறுமைக்குள் கொண்டுபோய் என்னைப்
படியநீ வைக்காதே பாரில்—அடியேன்யான்
ஏற்றபணி செய்திடவும் ஏற்புடைய நாடிடவும்
தேற்றமுடன் நல்லருளே செய். 198

எச்சமயஞ் சார்ந்திங் கிருந்தாலும் பேதமின்றி
அச்சமயத் தோடொழுகல் ஆண்மையதாம்—பச்சமின்றி
ஏதும் அறியாமல் எங்குந் திரிந்தலைதல்
தீதுக்கு வித்தே தெரி. 199

இறையோன் மனம்வைத்தால் இக்கணமே என்னை
மறையாப் புகழ்மேவ வைப்பான்—சிறையாக
வைத்திடவுந் துன்பம் மருவிடவும் நீக்கிடவும்
எத்ததியும் வல்லான் இறை. 200

அட்டாங்க யோகமதை ஆர்வமுட னேசெய்ய
எட்டிப் பிடித்திடலாம் ஏகனருள்—மட்டிகளாய்
வீண்பொழுது போக்கி விளையாடித் தான்திரிதல்
மாண்பில்லை காண்பீர் மதித்து. 201

தங்கித் தவமிருக்கத் தானறிவாய் எவ்வுலகும்
மங்கித் திரிந்தால் மதிகெடுவாய்—திங்களன்னார்
ஞானக் கதிராய் நகர்முழுதும் தங்கிடுவார்
ஈனர்க் கிதுபுரியா தெண். 202

அண்டபிண்ட மத்தனையும் ஆன்றோர் அறிவதல்லாற்
குண்டர்களெங் கேயிதனை கூர்த்தறிவார்?-மண்டுகளாய்ப்
பொய்யுலகை நம்பிப் பொழுதைக் கழித்திடுவார்
ஐயனருள் தேரார் அவம். 203

இறைவன் அருளென்னும் இன்னூர்தி பெற்றுற்
குறைவின்றிச் சென்றுலவல் கூடும்—திருமிகுத்த
தற்பரனின் நல்லருளைத் தானிணையா ரெந்நிலையில்
விற்பனராய் வாழ்வார் விளம்பு. 204

மக்களோ டன்பாய் மகிழ்ந்திருக்க எண்ணுக்கால்
நக்க னருளில்லை ஆய்ந்திடுவீர்—எக்காலும்
எல்லா உயிரிடத்தும் ஏற்ற மகிழ்ச்சியுடன்
சல்லாபத் தோடன்பாய்ச் சார். 205

நற்பழக்கத் தாலே நலனடைவார் பூதலத்தோர்
துர்ப்பழக்கத் தாலே துயருறுவார்—ஒப்ப நலஞ்
செய்தாலே நன்றடைவீர் செய்யாக்கா லேதடைவீர்
மெய்யாகக் கண்டினிது மேவு. 206

பாட்டாளி யானவரைப் பக்குவமாய்ப் பேணிடவே
நாட்டில் பலநன்மை நாடிவரும்—தூற்றிடுதல்
தன்னுயிரைத் தான்மடித்த வாறதுவா மென்றறிந்து
இன்னினிய செய்க இசைந்து. 207

நாயகத்தின் வேதமொழி நன்ருய்ந் தினிதோதித்
தாயகத்தில் வாழல் தகுதியாம்—மாயவனும்
அன்னவரின் பக்கத் தமர்ந்து நலமருள்வான்
சொன்னமொழி தேர்மின் சுகம். 208

இரக்கமுளான் வாழ்க்கை இனிதாம் புவியில்
இரக்கமிலார் வாழ்க்கை இடியும்—மறக்காதீர்
என்றும் இடும்பையுளார்க் கேற்ற நலஞ்செய்மின்
பொன்ருப் புகழ்மேவும் போய். 209

இறைவன்பற் றில்லான் இதயமற்றுப் போவான்
இறைவன்பற் றுள்ளான் இனிதே—மறையுணர்ந்தார்
போற்றிசெயும் வாழ்வுமலர்ப் பூங்கா தனிலுலவி
நாற்றிசையி லுஞ்சிறப்பான் நாடு. 210

பிணியாளர் தம்மைப் பிரியமுடன் கண்டே
இனிதா முறைபேசல் இன்பம்—புனிதமின்றி
நாணி வெறுத்தாலே நாளைக்கே யுன்றனிட
மேனி புழுக்குமென மேவு. 211

நல்லமழை பெய்தாலே நானிலம்நன் ருய்ச்சிறக்கும்
நல்லமழை இல்லாக்கால் நாசமுறும்—உள்ளபடி
ஈச னருள்நினைந்து ஏற்றமுட னேதொழுதால்
தேசஞ் செழிக்குந் தினம். 212

நற்செயல்கள் செய்துவர நல்ல மழைசுரக்கும்
துர்ச்செயல்கள் செய்தாற் றுளிவிழுகா—பற்பலரும்
இன்ன நிலை தெரிந்து என்றும் பணிபுரிந்தால்
மன்னவர்க்குத் துன்பமில்லை மன். 213

பெய்யும் மழைமிகுத்துப் பெட்புடைய நற்பணியில்
வையந் தழைப்பதிலே மாண்புண்டிங்—குய்யும்
வழியறிந்து செல்லார் வகைகெட்டுப் போவார்
பழியின்றி வாழப் பழகு. 214

நீரில்லா ஞாலம் நிலைகெட்டுப் போகுமே
ஆறில்லா ஊரும் அழியுமே—பாரிற்
பணமில்லான் வாழ்க்கைப் பலமின்றும் என்றும்
குணமில்லான் வாழ்க்கை கொடிது. 215

பருவமழை யில்லாவூர் பாழடைந்து போகும்
பருவமறிந் தோதானும் பாழே—திருநெறியோர்
சொல்லுணரான் பாழே சுருதியுண ரான்பாழே
பல்லில்லான் சொல்லுரையும் பாழ். 216

நல்லோர் பிறத்தல் நலமாம் புவிதனக்குப்
புல்லோர் பிறத்தல் பெருந்துயராம்—வல்லோரைப்
பேணப் பெருமைவரும் பேணுக்காற் றுன்புவரும்
காணக் கிடக்குங் கதை. 217

நல்லோர் பிறந்தாலே நாட்டுப் பெயர்விளங்கும்
புல்லோர் பிறந்தாற் புரையாகும்—நல்லோர்
இதையுணர்ந்து நல்ல இதமுடனே வாழ்வார்
சிதைவுடையார் காணூர் தெளி. 218

ஆட்சிமொழி கற்றுயர ஆர்வமுறு அல்லாத
வீழ்ச்சிமொழி கற்க விழையாதே—மாட்சியுடன்
தொல்லுலகில் ஆட்சிமொழி தேர்ந்து தொழில்புரிதல்
நல்லபலன் சேர்க்கும் நனி. 219

நல்ல பயிர்வளரும் நஞ்சையிலே நன்றில்லாப்
புல்லுகளுந் தான்வளரும் போக்கதுபோல்—தொல்லுலகில்
நல்லோரால் பிள்ளைகட்கு நல்லுரைகள் ஓதிடினும்
புல்லோ ருரையும் புகும். 220

ஒற்றுமையாய் நாட்டோர் உவப்புடனே தான்கூடிப்
பற்றுடனே வாழப் பலன்கூடும்—ஒற்றுமைவிட்
டெப்பொழுதுஞ் சாதிமத மிங்கியம்ப லால்நெறிதான்
தப்பிதமாய்ப் போகுந் தடித்து. 221

எல்லோரும் ஓரினமென் றெண்ணி மகிழ்ந்திருத்தல்
நல்லோர் செயலாகும் நானிலத்தில்—புல்லோர்
உயர்வுதாழ் வென்றிங் குரைத்துக் கெடுப்பர்
அயர்வின்றி நீநன் கறி. 222

தொழிலுக்குத் தக்க துயர்நாமம் சூட்டி
இழிவற்று வாழ்தல் இனிமை—பழியுடையார்
சாதிப் பெயர்கூறிச் சங்கையற்று வாழுகிறார்
ஏதிவர்க்கு நன்மை இயம்பு. 223

நல்லமல ரோடிணைந்த நாரும் மணம்பெறல்போல்
நல்லவரைச் சார்ந்தார் நலம்பெறுவார்—புல்லரிதை
ஓரார் உயர்வனைத்தும் ஓரார் உயர்ந்தவரைச்
சாரார் உயர்வதெங்ஙன் சாற்று. 224

மேலோர் வரலாறு மேதினியில் வாழ்ந்துவரும்
கீழோர் வரலாறு கீழ்மையுறும்—நாளடைவில்
உன்சரிதை எந்நிலையை உற்றிடவென் றெண்ணுகிறாய்
நன்சரிதை யாக நட. 225

பிறக்கின்ற போது பெரிதும் மகிழ்வார்
இறக்கின்ற போதிங் கெதற்கோ—கிரக்கமுடன்
கோவென் றழுகின்றார் கொட்டுகிறார் தட்டுகிறார்
ஊழை யறியார் குறி. 226

கற்றோர் வறுமையுறக் கண்டுதவா மானிடர்கள்
கற்றோர் இறந்தாற் கதறுவார்—மட்டிகளுக்
கென்னென்று சொல்லி எடுத்துரைப்ப திவ்வுலகில்
கண்ணொன்று கற்றோரைக் கார். 227

அலையலையாய் எண்ணுகிறார் ஆசைவழி நின்று
மலைமலையாய் வாங்குகிறார் மண்ணை—தலைசாய
யாரோ யனுபவிப்பார் இன்னவரின் செல்வத்தை
ஊரே யனுபவிக்கும் உன். 228

ஆலைக் கரும்பாகி ஆடிப் பொருள்சேர்த்து
வேளையறிந் துண்ண விழையாமல்—பேழைக்குள்
பூட்டிவைப்பார் பொய்யுடம்பு போயினபின் வன்நெஞ்சர்
வாட்டமின்றி யுண்பார் வளைத்து. 229

சீதேவி சேரச் சிறப்புண்டு யாவருக்கும்
மூதேவி சேர முரண்படுமே—தீதேவிட்
டாக மறையோதி யன்புநெறி யேபேணி
வாகாக வாழ்வாய் மகிழ்ந்து. 230

தைரிய லட்சுமியைத் தான்கொண்டு நன்றெண்ணி
ஐசுரியத் தோடுலகில் ஆர்வமுடன்—மயலகற்றி
வாழ்வாங்கு வாழ வகைதேடி நிற்பவற்குத்
தாழ்வாங்கு கிட்டாது தான். 231

எல்லோரும் போற்றிடவே இவ்வுலகில் வாழமறை
வல்லோருக் குண்டு வகையறியார்க்—கில்லையில்லை
வெட்டுண்டு குத்துண்டு வேதனைகள் மிக்குண்டு
பட்டுண்டு போவார் பதைத்து. 232

மண்ணுக்குள் நற்பொருளை வாரி வழங்கிடுவீர்
விண்ணுக்கு நல்லருளை மேவிடுவீர்—புண்ணியனும்
வாழ்வளித்து நல்ல வகையா நலமருளி
தாழ்வொழித்துக் காப்பான் தக. 233

உள்ளக் கசடுடையான் ஒன்றுக்கு மாகான்
கள்ளக் குறும்பரவர்க் காகானே—உள்ளபடி
நல்ல இரும்பும் துருப்பிடிக்கக் கேடுறுமால்
உள்ளிருக்கும் வன் துருவை ஓட்டு. 234

நல்லோர் மனங்கலங்க நாட்டோர் வழிவகுத்தால்
உள்ளோர்க்கிங் குள்ள நலன் ஓடிடுமே—நல்லறிஞர்
நல்லுளத்திற் கின்பமதை நாம்தரவே இன்பமெல்லாம்
புல்லவரும் நம்மையென்று பேசு. 235

கோபம் மிகுந்தோர் குணங்குறைத்து போவாரே
கோபங் குறைத்தோர் குணமிகுவார்—கோபமதால்
என்றும் இகழ்வென் றியம்பினர் நல்லறிஞர்
கண்டுசினங் காத்திடுவாய் தான். 236

ஆகாரந் தன்னை அளவறிந் துண்டிடவே
வாகாய்ப் பிணிநீக்கி வாழ்ந்திடலாம்—வேகாத
பண்டமொடு மற்றும் பலகாரம் பச்சடிகள்
தின்றவர்க்கு நோயணுகுந் தேர். 237

முன்னுண்ட சோறு முழுதும் செரிவுபடப்
பின்னுண்ண வேண்டும் பிரியமுடன்—மண்ணுலகில்
பன்றிகள்போல் பல்லுணவை பற்றிப் புசிப்பதனால்
மண்டிவரும் பன்னோய் மதி. 238

பிணியின் கொடிதறியாப் பேதையர்போ லுண்டால்
பிணிவந்து முற்றிடுமே பே—இனிதான
நல்ல பசியறிந்து நல்ல ருசியறிந்து
கொள்ளுணவே வெல்லும் பிணி. 239

காலத்திற் கேற்பக் கணக்கறிந்து உண்டிடுதல்
சாலச் சிறந்த தகவுடைத்தாம்—ஏலத்தில்
விற்கும் பொருளின் விதமறிந்து வாங்குதல்போல்
ஒக்கும் உயருணவை யுண். 240

மலர்தாவும் வண்டெனவே மங்கையர்தோள் மேவப்
பலர்வாழ்வு கெட்டழியும் பாரில்—களறுவதை
நன்றே யுணர்ந்து நலம்பெற் றிடவொருத்தி
கொண்டுமனை கூடிடுவீர் கூர்ந்து. 241

பூவுலகில் நல்லறங்கள் பூரித் தியற்றுக்கால்
நாவுலர்ந்து நானா நலிவுறுவீர்—பாவுணர்ந்து
நன்மனத்தோ டென்றும் நலம்புரிய நல்லறங்கள்
இன்னினிதே செய்வீர் இசைந்து. 242

ஏனோ முயன்றுபொருள் ஏற்றீர் புதைத்திடவா?
ஏனோ சடமானீர் ஏங்கிடவா—ஏனோ
மறைகற்றும் புத்திபெற்றும் மாண்பிழந்து போனீர்
சிறையிட்ட தோசெல்வச் சீர். 243

பொருள்பெற்ற நன்மை பிறர்துக்கண் தீர்த்தால்
அருள்பெற்ற நன்மையுயர் வாக்காம்—இருளடைய
வைத்தாலே நெஞ்சம் வகைகெட்டுப் போயிடுமால்
சைத்தானை வென்றிடுவார் தான். 244

ஏகமாய் எங்கும் இருப்பவனே நல்லொளியைப்
பாகமாய் வைக்கப் பணிகின்றேன் சாகளவும்
பொய்யுலகிற் பொற்செயல்கள் போற்றிப் புரிந்திடவே
மெய்யறிவை ஊட்டு விரைந்து. 245

ஞானிகளே மாதங்கம் நன்றறியா மானிடர்கள்
ஆணிகளே சிற்றிரும்பு ஆகுங்கால்—தேனதனிற்
பால்கலந்த வாறதாம் பக்குவமார் ஞானிசெயல்
தேள்விழுந்தாற் போன்மிழிஞர் சீர். 246

துவக்கத்தில் நன்மை துயராகத் தோன்றும்
பழக்கத்தில் மேன்மை படியும்—வழக்கத்தில்
அன்புகொண்டு நல்ல அறத்தா றதுசென்றால்
இன்புவரும் என்றும் இனிது. 247

கூழைக் குடித்துக் குடிசையிலே வாழ்ந்தாலும்
காளையென வாழ்வார் கணக்கறிந்தோர்—தாழையது
காட்டுக்குட் பூத்தாலும் காண்பயனில் நன்மகிழம்
வீட்டுக்குட் பூத்தாலும் மேல். 248

உடம்பின் பெருமைகண்டு ஊர்த்தலைவ ளுக்கத்
திடமாய்க் குடியழிந்தே தீயும்—உடனுகக்
கற்றுத் தெளிந்தோரைக் கண்டுதலை யாக்கிடுதல்
முற்றும் பயனளிக்கும் முன். 249

ஆட்சி விரும்புவதும் ஆன்றோர் கருத்துரையே
மாட்சியிறை வேண்டுவது மப்படியே—காட்சி
அறிந்தே புவிவாழும் ஆன்றோரை நாடித்
தெரிந்தே சிறப்படையத் தேர். 250

தன்குறையைத் தானுணரத் தட்டி மறுத்திடுவார்
பின்னொருவர் தன்குறையைப் பேசிடுவார்—நன்றேசொல்
தன்குற்றம் நீக்கிப் பிறர்குற்றம் போக்குவதே
நன்றுணர்ந்தார் செய்கையென நாடு. 251

ஊருக்கு ஞானம் உரைத்திடவே முந்திடுவார்
சீருக்கு நேர்மாறு செய்திடுவார்—ஊருக்கு
ஞானம் உரைக்குமுன்னே நன்னெறியி லேயுன்னைத்
தானுலகம் போற்றிடவே சார். 252

அறியாதார் செய்த பிழைகள் பொறுத்தல்
பெரியார்தம் கேண்மையெனப் பேசு—நெறியில்லா
மூர்க்கர் முறைபிறழ்ந்து முன்கோபத் தோடுபிறர்
ஆக்கஞ் சிதைப்பார் அறை. 253

பிள்ளைகள் செய்பிழையைப் பெரிதாய் மதித்தவரைத்
தள்ளி மிதிப்பதொரு தண்டனையோ?—நல்லபடி
தீதுதனை நன்றெடுத்துச் செப்பியவர் நன்றுணர
ஓதுதலே பண்பா முணர். 254

நெஞ்சில் உரமில்லார் நேர்மைத் திறமில்லார்
வஞ்சனைகள் செய்வார் வழிப்பறியும்—அஞ்சலின்றிச்
செய்வார் சிறுதொழில்கள் செய்வார் சிறியவர்கள்
உய்யும் வழியாதோ ஓர். 255

அனுதினமும் நல்லிறையை அன்புகொண்டு வேண்டப்
பனுவலொடு நற்கலைகள் பண்ணி—இனிதாக
இங்கு நமக்களித்தே ஏற்றமிகத் தந்திடுவான்
சங்கையுடனேயவனைச் சார். 256

தஞ்ச மடைந்தவர்க்குத் தக்க நலமளிப்பான்
வஞ்ச மனத்தினரை வாட்டிடுவான்—வஞ்சமறும்
நெஞ்சத்தோ டென்றும் நினைத்துப் பணிந்திடிலோ
பஞ்சமிலா வாழ்வளிப்பான் பார். 257

வஞ்சகத்தை நெஞ்சிறுத்தி வாழ்கின்ற மட்டிக்கு
நஞ்சை அளித்திடுவான் நானிலத்தில்—வஞ்சகத்தைத்
தள்ளி வெறுத்துத் நகைமையுடன் வாழ்ந்தோர்க்கு
தொல்லையிலா நல்லருளீ வான். 258

துன்பம் தொடர்ந்துவர அன்பு வைப்பார் நல்லிறைபால்
இன்பம் பெருக இறையருளை—அன்புகொண்டு
சிந்திக்க எண்ணார் சிறுமக்கள் செய்கையதால்
வந்திடுமே துன்பம் வளர்ந்து. 259

செல்வச் செருக்காய் செகமதிலே வாழ்வோரும்
வல்வினையால் ஓடெடுக்கும் வாய்ப்புவரும்—நல்வினையில்
வந்தபொருள் போகுமுன்னே வாரி வழங்கியறஞ்
சொந்தமெனக் கொள்வீர் சுகம். 260

இன்றிருப்பார் நாளை தினம் எங்கோ மறைந்திடுவார்
மண்டுபொருள் கெட்டு மதியிழப்பார்—கண்டறிந்து
வாழ்வு நிலையாமை வாகாய் அறிந்து பொருள்
தாழ்வுறுமுன் செய்வீ ரறம். 261

இளமை நிலையாது யாக்கை நிலையா
வளமையு மப்படியே மன்னும்—உளபொழுதே
சீர்மைச் செயல்புரிந்து செம்மை நெறிவளர்த்து
நேர்மையாய் வாழ்வீர் நிலத்து. 262

மண்ணில் புதைத்துநீ மாளாதே நற்பொருளை
கண்ணிருந்தும் பாழ்கிணற்றில் கால்வைக்க—எண்ணுதே
யாக்கைப் பயனறிந்து நன்றியற்ருர் நற்செல்வர்
மூக்கறுக்கப் பார்க்கும் முறை. 263

விந்தை எழிலுருவம் வீங்கி அழுகிவிடும்
இந்த உடல்தனக்கா ஏங்கினுய்—முந்தியிறை
பாதம் பணிந்து பகலிரவாய் நன்றியற்றி
போதம் புனையப் புகழ். 264

காலைப் பருவத்தே காத்துவரின் ஐம்புலனை
நாளை உனக்கு நலம்பெருகும்—பேழைக்குள்
இட்டபொருள் என்றும்இடம் மாறிப் போவதில்லை
திட்டமுடன் கண்டு தெளி. 265

சிந்தனையை உள்ளிருத்தித் தேர்ந்தே நறும்பணிகள்
விந்தையுறச் செய்து வினைமுடிப்பாய்—மந்தமுடன்
சிந்தனைக ளின்றிச் சிறிதும் பணிபுரியார்
இந்தப் புவிக்குச் சுமை. 266

கடன்கொடுக்கும் போதே கணக்கெழுதா விட்டால்
உடைமை நிலைதவறி ஓடும்—உடனுடனே
செய்யாத காரியங்கள் சீரழிந்து போகுமால்
மெய்யாக நம்பி விடு. 267

கஞ்சாவும் கள்ளுங் கருதிக் குடிப்போர்க்கு
நஞ்சே குடிவாழ்க்கை நாடுங்கால்—தஞ்சமென
உள்ளத்துள் நல்லிறையை ஓயா தினிதோதக்
கள்ள நிலை மாறுங் கரைந்து. 268

நல்லறநூ லோதாமல் நன்மை யியற்றுமல்
உள்ளவா ரென்றும் உறங்கிடுதல்-நல்லதுவோ ?
பொன்னே கொடுத்தும் பெறற்கரிய நற்பொழுதை
கொன்னே கழித்தல் குறை. 269

சோம்பேறி யாகிச் சுகந்தேடி வாழ்ந்திடுதல்
வீம்புடையார் செய்கை விளம்புங்கால்-தேம்புநிலை
விட்டவரே வெற்றிபல பெற்றவராம் கண்டுணர்ந்து
இட்டமுடன் நன்றியற்ற வெண். 270

எல்லா மறிந்தாலும் யார்க்கும் உரைக்காது
நல்லோர் அடங்கி நடந்திடுவார்-புல்லரோ
ஒன்றும் அறியா திருந்தும் உளறிடுவார்
வென்றிபெறக் கல்வியிலே வீழ். 271

கற்றமெனச் சொல்லிக் கடிது மகிழ்ந்திடுவார்
திட்டமுடன் கற்றவரோ செப்பிடுவீர்-கற்றவர்கள்
கல்விக் களவில்லை என்ப தறிந்துநிதம்
கல்விபல கற்பார் கடந்து. 272

வித்திருந்தால் என்றும் விளைநிலத்திற் போட்டிடலாம்
வித்தில்லார் எங்கு விதைத்திடுவார்-புத்திபல
பெற்றவரே நல்விறையைப் போற்றிடுவா ரல்லாதார்
பெற்றமெனச் சற்றும் பெரிது. 273

ஐந்து வயதுமுதல் ஆய்ந்து படித்துவர
ஐம்பதிலும் மேன்மை அருகிருக்கும்-ஐந்திலே
கல்லாதார் என்றென்றும் கல்லாரே பொல்லாரே
எள்ளாதார் யாரும் இலை. 274

ஓதுவார் கோடி உளறுவார் மாகோடி
மோதுவார் அன்னவரிற் பல்கோடி—ஏதம்
நிறைந்தாரை எண்ணிடுதல் நீணிலத்தில் ஏலா
தறைந்திடுவாய் ஏதிங் கறிவு ? 275

கள்ளருந்தி வாழும் கருத்தில்லா மானிடரே
கள்ளருந்த லென்றுங் கடும்பாவம்-கள்ளருந்தல்
நல்லுடம்பை மாய்ப்பதொடு நல்வழியை மாற்றிவிடும்
தள்ளிநட புன்குடியைத் தான். 276

பெண்ணவளைக் கண்டு பிரியமுடன் பேசிவர
உன்னிடத்துக் காமவுணர் ஊறுமே—அன்னதுதான்
உன்னுற்றல் உன்னறிவு உன்னுறுதி மாய்த்துமனம்
புண்ணுக்கு மென்றே புகல். 277

சிந்தை தனையடக்கிச் சீருடனே வாழ்ந்திருக்கத்
தொந்தரவு ஏதுந் தொடராதே—இந்தநிலை
காணு தலைவாரைக் காமன் கணைதொடுத்து
மாணு வளறுய்ப்பான் மற்று. 278

காசு சதமென்று கார்புவியில் வாழ்வோர்க்கு
வாசி கிடைக்காது வையகத்தில்—நேசமொடு
எல்லோர்க்கும் அன்புசெய்து என்றும் நலமியற்ற
வல்லோனின் நல்லருள்வாய்க் கும். 279

பணமுடையோர் என்றும் பயனடைய வேண்டின்
குணமுடனே நல்லறத்தைக் கொள்வீர்—குணமின்றி
வையகத்தில் வாழுகின்ற மனிதருக்குத் தீநரகம்
மெய்யாக வாய்க்கும் விளம்பு. 280

காவி யுடுத்திக் கயமை புரியாதே
பாவியெனச் சுற்றிப் பதுங்காதே—ஆவியது
காயம் விட்டோடுமுன்னே காம மதைவிடுத்து
தாயனைய நல்லிறையைச் சார். 281

இல்லறத்தை விட்டெங்கும் ஏகித் திரிவதனுல்
வல்லவனின் பக்தி வளருமோ ?—உள்ளிருந்து
நல்ல இருவினையும் நாட்டமுடனே செய்ய
வல்லவனின் நல்லருள்வாய்க் கும். 282

விதியென்று சொல்லிநிதம் வீண்காலம் போக்கில்
மதியில்லார் செய்கை வரைய—விதியென்ப
தாதிசெய லாலுனும் ஆர்வமது குன்ருது
மேதினியில் நற்றெழிலை மேவு. 283

விதியதனை வெல்ல விரும்புவோர் கூர்த்த
மதியைப் பயன்படுத்தல் மாண்பு—விதியதுதான்
முன்செய்த மாவினையா லாயிடினு நல்லறிவு
வந்தவிடம் நீங்கும் மதி. 284

மதியுடையார் என்றும் வருவினையை வெல்வர்
துதிடையார் என்றும் துலங்கி—விதியதனை
வெல்வர் வினைக்கேட்டை வெல்வார் இதையறிந்து
செல்வாய் சிறப்பார் வழி. 285

முன்னுக் கொருவார்த்தை மேன்மையுட னேபேசி
பின்னுக் கொருவார்த்தை பேசுகின்ற—உன்னுக்கைக்
கட்டத் தெரிந்துவிடிற் காலமெலாம் நன்மைபல
இட்டமுடன் எய்திடுவாய் எண். 286

கணக்கறிந்து பேசிடுவோர் காசினியில் சில்லோர்
கணக்கின்றிப் பேசிடுவோர் பல்லோர்—பிணக்கறவே
சொல்வாய் பயனறிந்து சொல்வாய் அது பிறரால்
வெல்லுந் தரமென்று விள். 287

வில்லனென வந்து விளங்காத் தனம்புரியும்
கள்ள மனத்தினரைக் கண்டறிந்து—உள்ளபடி
நீக்கி யவருறவை நெட்டாற்றில் விட்டிங்கு
தேக்கு பெரியோர் தெளிவு. 288

நல்ல கொடுவிடஞ்சால் நாகமதைக் காட்டுதற்கும்
வல்லமையை நீபெறவே மாண்புகாண்—அல்லாக்கால்
யாரும் மதியாரே அந்தோ உனைத்தூற்றிச்
சீரைக் கெடுப்பார் தினம். 289

நிறைகுடநீர் என்றும் நிலைகெட்டுப் போகா
குறைகுடநீர் கொட்டும் குதித்து—திரையுலகில்
கற்றறிந்த மேலோர் கலங்கி நிலைகுலையார்
மற்ருேர் குதித்தழிவார் மற்று. 290

நல்லோருக் கிவ்வுலகில் நாசக் கொடுமைசெயும்
பொல்லாருக் கென்றென்றும் பொன்வழங்கும்—வல்லானை
வாழ்த்த மறந்திருக்கும் மாயைவிட்டுத் தாள்பணிந்து
வாழ்த்து முலகை மதி. 291

நல்லோர்கள் பெற்றதனம் நாட்டு நலம்வளர்க்கும்
அல்லோர்கள் பெற்றதனம் ஆகாதே—தொல்லுலகில்
வாழை பழுத்தால் மகிழ்வளிக்கும் காஞ்சிரங்காய்
காவிற் கிடந்தாலென் காண்? 292

பொருளில்லா நேரத்தில் பேசிடுவார் ஞானம்
பொருளுற்ற போதெதுவும் பேசார்—அருள்விட்டுத்
தீதுபல செய்து தெருவெல்லாங் கூத்தடித்து
மாதுபல நாடிடுவார் மன். 293

நல்ல மதச்சின்னம் நாளும் அணிந்திடுவார்
வெல்ல மெனவினிக்கப் பேசிடுவார்—எல்லோரும்
போற்ற நடித்திருந்து பொல்லாத சூதுசெய்வார்
தோற்றம் நிலக்குப் பொறை. 294

கஞ்சாப் புகைத்துக் கருத்தை அழித்திடுவார்
நெஞ்சாரப் பொய்யை நெடிதுரைப்பார்—அஞ்சாது
தீதுபுரிவார் தினமுங் குடித்தலைவார்
ஏது பெருமை இவர்க்கு? 295

கஞ்சிக்குக் காசு கிடைக்காத காலத்தும்
கஞ்சா புகைப்பார் கருத்தாக—பஞ்சர்செய்
புன்செயலால் அன்னவரின் பெண்டுபிள்ளை வாடியழும்
நன்செயலோ வீது நவில். 296

நல்ல வழிநடக்க நாடுவார் கஞ்சாவை
உள்ளுவரோ உள்ளார் உணருவீர்—பொல்லாத
நோயைக் கொடுக்கும் நொடிக்குள் அறிவழிக்கும்
மாயைப் பிசாசுமது மாய். 297

பொய்யூரை நம்பிப் புளகமுறும் மானிடர்காள்
மெய்யூரை நம்பி விரைந்திடுவீர்—பொய்யூரில்
பொல்லாங்குந் தீதும் புரையும் மலிந்திருக்கும்
இல்லையே மெய்யூரி லீது. 298

நெஞ்சை மிகக்கருக்கும் நேர்மை தனைவெறுக்கும்
பஞ்சையர்போ லென்றும் பரிதவிக்கும்—கஞ்சாவின்
தீமை தனையறிந்து தேகநிலை காத்திடுதல்
சேமம் புகுவார் செயல். 299

போதைப் பொருளருந்திப் புத்திகெட்டு நிற்பவரைப்
பேதையரென் றெல்லோரும் பேசிடுவார்—ஆதலினால்
நல்லஇசை கெடுக்கும் நஞ்சனைய எப்பொருளும்
கொள்ள மறுத்தல் குணம். 300

தூய உடம்பைத் துயர்படுத்தும் தீயவழி
ஞேயமதாய்க் கொள்ளல் நிலைகெடுக்கும்—பேயனைய
பொல்லாக் குறுஞ்செயலின் போக்கறுத்தல் நல்லறிவு
வல்லாரின் செய்கை மதி. 301

கற்றுத் தெளிந்து கயமை தனையகற்றி
நற்றவத்தோர் போற்றுவழி நாடுவது—வெற்றியொடு
வாழ்வின்பம் யாவும் வரைவின்றி நல்குமால்
தாழ்வின்றிப் பேணல் தரம். 302

திருட்டு மனத்தார்க்குத் தெய்வஅரு ளில்லை
குருட்டுமனத் தார்க்குக்கோ ளில்லை—உருட்டும்
புரட்டும் புரிவார்க்குப் போக்கில்லை இல்லை
முரட்டுத் தனத்தினர்க்கும் முன். 303

பொருளாசை ஓங்கப் புனிதமில்லை மண்ணில்
அருளாசை ஓங்க அமையும் மருளாசை
விட்டவர்க்குக் கிட்டவர்க்கு மேலோன் அருள்நினைவு
துட்டருக்குத் தொட்டதெல்லாந் தேள். 304

புத்தியுளா னென்றும் புனிதநிலை பெற்றிடுவான்
புத்தியிலா னென்றும் புனிதமற்று இத்தரையிற்
பேயா யலைந்து பெருமை தனையிழந்து
நாயாய்த் திரிவான் நகைத்து. 305

வயதுபெ ருகுமுன்னே வல்லானை வேண்டித்
துயரதனை நீக்கத் தொடங்கு—வயதேறி
மூப்படைந்து வீழுமட்டும் மூர்க்க நிலையிலிருந்தாற்
தீப்பயனே கிட்டுந் தெளி. 306

பிச்சை யெடுத்துப் பிழைக்குநிலை தன்னிலுமே
கச்சிதமாய் வாழக் கடனுகும்—அச்சமொடு
சோர்வு மனக்கலக்கம் சோம்பல் நிலைமழுங்கல்
சீர்கெடுக்கு மென்றுந் தெரி. 307

ஞான நெறிநினைந்து நன்மை பெறவிழைந்தால்
மோனமுங் கிட்டியே முக்திவரும்—ஞானச்
சுடரின்றி மாயையெனுந் துன்னிருட்டைப் போக்கல்
குடரின்றிச் சோறடைக்கு மாறு. 308

சிந்தனை என்றும் சிறப்பாய் மனத்திருத்த
வந்தனை செய்வா ரகிலத்தோர்—சிந்தனையை
விட்டொதுக்க மானிலத்தோர் விட்டொதிக்கித் தீயமொழி
இட்டமுடன் சொல்வார் இடித்து. 309

எச்செயலைச் செய்ய இசைவுரினும் அச்செயலை
மெச்சிடவே செய்தல் விளங்கறிவாம்—ஒச்சமுறச்
செய்யும் செயலெல்லாம் சீர்கெடுத்து வாழ்வருக்கிப்
பையரவின் முன்னிருத்தும் பார். 310

சின்னமத லையர்வாய்த் தேன்மொழியைக் கேட்டென்றும்
அன்னை மகிழ்வாள் அளப்பரிதாய்—அன்னையெனப்
புல்லா மலடியிந்தப் போக்கறித லில்லைபோற்
கல்லா ரறியார் கருத்து. 311

ஊக்கமுடன் நற்செயலை ஊன்றித் தினஞ்செய்ய
ஏக்க மகன்றின்ப மேறிவரும்—ஊக்கமின்றிச்
சோம்பேறி யாகிச் சுணைகெட்டு வாழுவது
வீம்பர்களின் செய்கை விதி. 312

வறுமையிலுஞ் செம்மையாய் வையகத்தில் வாழப்
பெருமை பெருகுமெனப் பேசே—அருமையுடன்
முன்னோர் வகுத்தநெறி முற்றும் மறந்துசெலத்
தன்னேரில் நன்மை தரும். 313

வெற்றுமொழி கொண்டு விரைந்தெங்கும் பேசுவது
கற்றவரின் செய்கையல்ல கண்டுணர்மின்...கற்றறிவில்
மூடர்களே புன்மை மொழிகள் புகன்றிடுவார்
பீடுடையார் சொல்லார் பிறிது. 314

இந்த உலகமது ஏற்றம் பெறுவதெலாம்
சந்ததமும் பாட்டாளி தன்னுழைப்பால்—வெந்ததனைத்
தின்று கொழுத்துத் திரிபவரால் ஏதுபயன்
இந்த உலகுக் கியம்பு. 315

எண்ணித் துணிந்தெதையும் இங்கியற்றல் நன்றுகும்
எண்ணித் துணியாக்கால் ஏற்றமில்லை—திண்ணமிது
செய்குவாய் எத்தொழிலுஞ் சீர்தூக்கிச் சிந்தித்திங்
குய்க்கும் வழியா முணர். 316

நாளையென்று நற்செயலைத் தள்ளாதே எக்காலும்
நாளை நமன்நாளோ நம்நாளோ—மூளையுடன்
செய்யும் செயல்களை நீ சீக்கிரத்தில் அன்றன்றே
செய்துவிடு சீராய்த் தெரிந்து. 317

எல்லோரும் நந்நலமாய் என்றென்றும் வாழ்ந்திடவே
உள்ளார எண்ணுகிறார் உண்மையிது—வல்லோனே
செய்த வினைக்கீடாய்ச் சேர்க்கிறான் இன்பதுன்பம்
கைதவர்கள் காணார் கதி 318

வாழ்க்கை யினிதாக வையகத்தி லேநடத்த
ஆக்கை நலம் பெற்றோர் அருநெறிகள்—வேட்கையுடன்
கொண்டு கடைப்பிடித்துக் கோதகன்று நின்றிடுவீர்
என்றும் இனிமை வரும். 319

பெற்று வளர்த்துப் பெருமைப்பட வைக்குமன்னை
சொற்கேட்டு வாழல் துரிசறுக்கும்—சிற்றறிவால்
அன்னை மனநோக ஆர்செய்த போதினிலும்
துன்னிவருந் துன்பம் தொடர்ந்து. 320

கடமை மறந்தவர்க்குக் கண்ணியங்கள் ஏதிங்
குடமைமறந் தார்க்குரிமை யுண்டோ?—திடமனதாய்
நல்லுரிமை நல்லுடைமை நந்நலத்திற் காய்என்றும்
சொல்லரிய தாய்க்கடமை செய். 321

எக்காலும் நெஞ்சத் தெழுங்காம வேட்கைதனை
பக்குவம தாயடக்கல் பண்பாகும்—சக்கரம்போற்
சுற்றித் திரிந்தார் சுகமழிந்து சோர்வுபட்டு
வெற்றுடம்பாய் வீழ்வார் மெலிந்து. 322

எண்ணிய எண்ணியாங் கெய்திமிக வாழ்வதற்குப்
புண்ணிய வல்லோனருளைப் போற்றிசெய்வாய் திண்ணமதாய்
இஃதுறுதி சேர்க்கும் இனிமைதரும் வாழ்வினிலே
வக்கிரங்கள் போக்கும் மதி. 323

உண்மைத் துறவிதனை யூட்டுவிக்கு மூரெல்லாம்
புன்மைத் துறவிதனைப் போற்றாதே—அன்னதுபோல்
கற்றறிந்தோர் போற்றுகின்ற கற்றோரைக் கல்லார்கள்
வெற்றுடம்ப தாய்மதிப்பார் விள். 324

மக்கட் பணிசெயலே மாண்பார் துறவறத்தின்
பக்குவமென் ஹேதும் பதமுணர்வீர் — நக்கனடித்
தொண்டுமது வாகும் தூய அருள்ஞானம்
விண்டுரைத்த தத்துவமு மாம். 325

எழுத்தாளர் ஏற்றம் இனிதின் உணரார்
கொழுத்தகருப் பன்றிகள்போற் கூடி — அழுத்தமுற
எள்ளுவார் என்றும் இருட்டை ஒளியென்னும்
புல்லரே யாவார் புரி. 326

குருசொல் மறையென்று கொண்டாடா மூடர்
திருவின்றி மாள்வார் தெரிவீர் — குருவென்றும்
ஆண்டவனின் தூதரென அன்றுரைத்த மெய்யுரையை
வேண்டிமனங் கொள்வீர் விரைந்து. 327

சிந்தை தனையடக்கிச் சீராம் வழிநடத்த
எந்த வினையும் இறும்பொடியாம் — சிந்தனையை
நல்ல வழிநடத்த நாணகன்ற தன்மையினுல்
எள்ளுவரே புல்லருமற் றெண். 328

என்றன் உளந்தனிலே ஏற்றவுயர், கோவில்செய்
துன்றனையே நான் தொழுவேன் உத்தமனே-விண்டமறை
உட்பொருளின் தத்துவமே உண்மையாய் நீயெனக்கு
விற்பனர்கள் போற்றுகலை விள். 329

வேடந் தனைப்பூண்டு வேதனைகள் செய்பவரை
மூடரென் றிங்கு முனிந்திடுவார்-வேடமதன்
தன்மை தனக்கேற்பத் தக்கநெறி நிற்பதுவே
நன்மையா மென்றும் நவில். 330

என்றும் பெரியவரை ஏற்றுப் பணிந்துபணி
நன்றதாய்ச் செய்ய நலம்வருமே — பொன்றிடச்செய்
பாதகரைப் பற்றிப் பணிந்து நடப்பவர்க்குச்
சாதகங்க ளில்லை சனி. 331

ஐம்புலனைக் கட்டி அடக்கிவிடு ஆண்டகைமை
செம்புலநீர் போலச் சிறந்தொளிரும் — ஐம்புலனைக்
கண்டபடி ஓடவிட்டாற் காட்டாற்று வெள்ளமென
கொண்ட நெறி கொல்லுங் குறித்து. 332

வீங்கும் பொருளையெலாம் வீணுக்கிரைப் போர்க்கிங்
கோங்கும் பிணிபலவாம் உன்னிடுவீர்—பாங்குணர்ந்து
நன்றுக் குதவும் நயனுடையார் நற்செல்வம்
வென்றிக்கு வித்தாம் விளம்பு. 333

அன்புடையோர் எல்லா முடையாரிம் மாநிலத்தில்
அன்பில்லா ரொன்றும் அடையாரே-துன்பொழிய
அன்புசெய்வீர் இன்புவரும் ஆரறங்கள் மிக்குவரும்
தெம்புவரும் தேசுவரும் தேர். 334

இருந்தும் வறியவர்க்கிங் கேதொன்றும் ஈயார்
வருந்திப்பின் நோவாரே வாழ்வில்—பெருந்தனத்தை
ஈந்து மகிழ்பவரே இவ்வுலகில் மன்னவராய்
வாழ்ந்திடுவார் கண்டு மதி. 335

உள்ளுருகிச் சொற்பரவி உத்தமனைப் பத்திசெய்தால்
விள்ளரிய நல்லுருவம் மேவிடுமே—கள்ளமனத்
துள்ளிருக்கும் பேய்பூத மல்லால் ஒருசிறிதும்
நல்லருளைக் காணார் நயந்து. 336

துன்பப் பெருக்காற் றுயருழக்க நேர்ந்திடினும்
பண்பற்ற வார்த்தை பகராதீர்—அன்புற்று
வல்ல இறையை மனத்திருத்த மாக்கடல்போற்
கொல்லும்வினை நீங்கும் குறித்து. 337

துன்பம் கொடுத்தாரைத் தூசணிக்க எண்ணுமல்
இன்பம் அவர்க்கீய எண்ணிவிட அன்பன்
வளமீவான் நல்ல வரமீவான் மற்றும்
பலமீவான் நாளும் பரிந்து. 338

அப்பா அரனே அகிலாண்ட பூபதியே
தப்பா தெனையாளுந் தத்துவனே—எப்பாலும்
போற்று முயர்பணிகள் பூரித்து நாணியற்ற
ஏற்ற வரமருள்வாய் இன்று. 339

பூவுலகும் பொன்னுலகும் பொன்ரு தறிந்தவரை
யாவுலகும் போற்றும் அறிந்துணர்மின்—பூவுலகம்
நல்லறத்தாற் கண்டிடலாம் நன்மைதரு பொன்னுலகம்
வல்லதவத் தாலறிய லாம். 340

எத்தனையோ மக்கள் இறந்தார் பிறந்தனரே
அத்தனையும் வாழ்வியலில் ஆவதுவே—சத்துவமாய்
யாருடைய நற்சரிதை நானிலத்தில் நின்றுலவும்
சீருடையாய் கண்டுணர்ந்தே செப்பு. 341

ஆந்தைபோற் கத்தி அலறிப் புலம்பிடுதல்
மாந்தர் செயலில்லை மானிலத்தில் – சாந்தமுடன்
நன்மொழியிற் பேசி நலம்விளைத்தல் என்றென்றும்
கண்ணியத்தார் பெற்ற கடன். 342

மிக்க உரையாடி வீண்வாதம் பேசிடுதல்
தக்கவர்க்கு நன்றல்ல தானறிவீர்—எக்கணமும்
சொல்லிற் பயன்விளைந்த சொல்லுக அல்லாக்காற்
சொல்லா திருத்தல் சுகம். 343

ஆதரவொன் றில்லா அனாதைக் குழந்தைகளை
ஆதரித்துப் போற்றுகின்ற ஆர்வமுள்ளார்—தீதகன்று
விள்ளரிய நன்மைபல மேவி இனிதடைந்து
நல்லவராய் வாழ்வார் நனி. 344

மாந்தர் மனங்கனிந்து மாயவனை வேண்டிவரச்
சாந்த மினிதளிப்பான் சற்குணனே—பூந்தூல்தான்
மந்திக் கரங்கிடைத்த வாறெனவே துன்புற்று
வந்தனையில் லான்கெடுவான் மற்று. 345

நீயன்றி என்குறையை நீணிலத்தில் யார்பொறுப்பார்
தாயன்பை விஞ்சுந் தகைமையுளோய்—சேயன்யான்
வேண்டுகிறேன் உன்நினைவும் மேலான நன்நெறியும்
ஈண்டெனக்குத் தந்தாள் இனிது. 346

அந்நாளில் மக்கள் அறிவிழந்து நோகுநிலை
கண்ணுரைக் கண்டு கனிந்துநீ—செந்நாவின்
நன்நபிதீன் நன்மறையும் நன்நெறியுங் காட்டுவித்தாய்
இந்நாளும் அந்நிலைசெய் வாய். 347

நறிய மலர்மணத்தை நட்டோர் விழைவார்
பெரிய தவத்தினரைப் பேணி—உரிமையுடன்
வேண்டுவன செய்வார் வியன்புவியிற் புன்மலரை
ஈண்டெவர்காண் தேடிடுவார் எண். 348

நன்முறையில் வாழ நலமுண்டே எக்காலும்
புன்முறையில் வாழப் புனிதமில்லை—இன்நெறிக்கு
வேதமது தந்தான் விளக்கிவைக்க ஞானிதந்தான்
நீதமது கொண்டு நினை. 349

தக்க பருவத்தே தான்பெய்யும் நன்மழைபோல்
தக்க பருவத்தே தானீக—இவ்வேதந்தான்
மேலுலக நல்வாழ்வை மேவியே முன்னிருத்தும்
பாழுலகம் போகாதே பார். 350

வல்லவன்யா னென்று மதிப்பாகப் பேசுகிறார்
வல்லவன்யார் நல்லிறையே யல்லாமல்—சொல்லளவில்
பேசிப் பயனென்ன பேதாய் அகங்காரம்
வாசி கெடுக்கும் மதி. 351

மண்டுக் கறிவூட்ட மாயவனே ஏதுவழி
கண்டுரைத்தாய் இங்கே களறுவாய்—விண்டுரைத்த
வேதத்தில் மூடர்தமை மேலாக்க ஏதுநெறி
ஓதித்தந் தாயதனை ஓது. 352

நாற்றச் சடலத்தை நானெடுத்து வாடுகிறேன்
மாற்று வழியிலையோ மாதவனே—கூற்றம்
வருமுன்னே உன்னருளை மாண்புடனே தந்து
பெறுமாறு செய்வாய் பெரிது. 353

துட்ட னெனப்பலரும் தூசிக்க வாழாமல்
கட்டளையை நன்றியற்றி கண்ணியமாய்—இட்டமுடன்
நன்மைபல எய்தும் நலஞ்சால் பிறப்பெடுத்த
துண்மைநிலை யிவ்வேதா முணர். 354

எல்லாச் சமயத் தினிதான வேதமெல்லாம்
பொல்லாக் குறும்பகற்றும் போதமொடு—வல்லானின்
நல்லருளை எய்துகின்ற நன்னெறியும் சொல்வதல்லால்
உள்ளபடி தீதொன் றிலை. 355

தீய களவகற்றத் தேரார் பிறர்பொருளை
ஞேயமுடன் கொள்ள நினைப்பரே தூயவர்கள்
இந்த நினைப்பை இதயத் திருத்தாரே
மந்திரம்போற் செல்வரினும். 356

மனத்தில் உறுதியுடன் மண்ணுலகில் வாழ
கணத்தில் நலமெல்லாங் காண்பீர்—பிணக்குடனே
உள்ளத் துறுதியின்றி ஊரெங்குஞ் சுற்றிடினும்
எள்ளளவும் நன்மையிலை எண். 357

அல்லாஹுவென்றே யனுதினமுங் கூறிவர
எல்லா நலமும் இனிதுவரும்—பொல்லாத
காதலிசை பாடக் கருத்தழிந்து மண்ணுலகில்
நீதமின்றிப் போவீர் நினை. 358

நன்முயற்சி யுள்ளோனே நாளும் நலமடைவான்
நன்முயற்சி யில்லான் நலம்பெறுன்—உண்மையறிந்
தென்றும் நறும்முயற்சி ஏற்றமுட னேசெய்து
நன்றடைதல் நல்லார் கடன். 359

குறிப்பறிய வல்லான் குவிதனத்தோ டென்றும்
சிறப்புடனே வாழ்வான் தெரிவாய்—குறிப்பறியான்
மங்கி வறுமையுற்று மண்ணுலகில் என்றென்றும்
பங்க மடைவான் பதைத்து. 360

மற்றோர் நிலையை மதிநுட்பத் தாலறிவான்
கற்றோர் புகழுங் கருத்துடையான்—மற்றோன்
இருந்தும் பயனில்லை ஏற்றமது காண
இறந்து படுதலே ஏற்றம். 361

முகத்தின் குறிப்பறிவோன் முக்காலும் மேலோன்
முகத்தின் குறிப்பறியான் முட்டாள்—செகமறிந்து
வாழ்வாரே வாழ்வார்க ளல்லால் வகையறியார்
வாழ்வாரே யாவாரோ மற்று. 362

உள்ளக் கருத்ததனை உன்னிப்பாய்க் கண்டுணர்வோர்
தொல்லுலகம் போற்றுகின்ற தூயவரே—அல்லார்
இழுக்கடைந்து நொந்தே இகத்திற் றிரிவார்
முழுக்க அழுகுங் கனி. 363

துன்பந் தொடர்ந்து வரினுந் தயங்காது
இன்புடனே நற்பணிகள் இங்கியற்று—துன்பமது
வெட்கித் தலைகுனிந்து வேதனையா மாழ்கடலிற்
சிக்கித் தவிக்குந் தினம். 364

வல்லாண்மை யாளர் வருந்துன்பத் தாலழுகார்
புல்லாண்மை யாளர் புலம்பியே—எல்லாரும்
சீச்சீ எனவெறுக்கத் தேம்பிடுவா ரிவ்வுலகின்
மாட்சிஇது வன்றும் மதி. 365

ஒருமனத்தோ டுன்னை உருகியான் வேண்டத்
திருமனத்தைத் தந்தாய் திருவே—பெருமையிலார்
உன்னை நினையா துருகி வழிபடார்
மண்ணையாய் வாழ்வார் மலைத்து. 366

திட்டமுடன் நற்றொழிலை சீருடனே செய்துவர
நட்டமேது மின்றி நலமடைவாய்—திட்டமொன்றும்
இல்லா தியற்றுகின்ற எப்பணியும் வெற்றிபெரு
தல்லலுறுங் காண்பா யறிந்து. 367

நாடு நகர்பலவும் நாட்டமுடன் சென்றுபொருள்
தேடிக் குவித்துத் தெரிசிப்பார்—பாடுபெறும்
நன்று நினைந்தொழுகார் நாட்டமுடன் வேசிமனை
சென்று கிடப்பார் சிதைந்து. 368

ஈசா உனதருளை ஈயெனவே நாயகனும்
ஏசாச் சிறப்பை இனிதளிப்பான்—தேசாரும்
உன்னருளை வேண்டா துலுத்தருக் கென்னளிப்பாய்
துன்னிருளை யில்லாற் றுணிந்து. 369

சந்தித்து நண்பர்களை சாந்தச் சலாமதுதான்
முந்தியிங்கு கூறு முகமலர்ந்து— சந்ததமும்
சேமம் விசாரித் தினிதேகல் நன்றிதுவே
ஏமமிது நட்புக் கியம்பு. 370

சோதி முகம்மதருள் சோதிக்க நீவிரும்பின்
நீதியுடன் புர்க்கானை நீணிலத்தில்—ஓதிவிடு
எல்லா விபரமு மேற்றமுட னங்குளதால்
வல்லார்கள் போற்றவாழ் வாய். 371

ஆமெம் படைத்த இறைவன் அதைநலமாய்ச்
சீலமுடன் காப்பான் தினந்தினமும்—ஞாலமிசை
அல்லலறுத் தாண்டிடுநல் லாண்டவர்க்கிங் காலயங்கள்
வெள்ளரிதாய்க் கட்டிடலே மேல். 372

மொக்கு மலர்ந்துமணம் மோகனமாய் வீசுதல்போல்
பக்குவஞ்சேர் நற்பணியும் பாரினிலே—எக்கணமும்
வீசி மணம்பரப்பி மேலாம் இசைசேர்க்கும்
வாசியுடன் காண்பாய் மகிழ்ந்து. 373

எங்கும் நிறைந்தவனே ஏக பராபரனே
சங்கை மிகுக்குந் தயாபரனே—இங்கிதமாய்
வாழும் வகையறியா மானிடர்கள் நன்னெறியைச்
சூழறிவை யீவாய் சுடர்ந்து. 374

இத்தரையில் எத்தனையோ ஏற்றவுயர் ஞானியரைச்
சித்தமுடன் கொண்டுவந்த செம்மலே—உத்தமமாய்
என்னையும் அவ்வழிக்கே இட்டுச்செல் பற்றுடனே
மண்ணுலகம் போற்றும் மகிழ்ந்து. 375

தேசம் புகழுஞ் சிறப்புமறை தந்திட்ட
பேசரிய ஞானப் பெருங்கடலே—நேசமுடன்
எல்லோரும் நன்றெண்ணி இங்கினிதாய் வாழ்ந்துயரப்
பொல்லா நெறியதனைப் போக்கு. 376

வஞ்சி மடக்கொடியாள் வாகாய் முறுவலிக்கக்
கொஞ்சிநீ பேசக் குதிக்கிறாய்—பஞ்சையே!
இன்பம் அதிலில்லை ஏற்ற இறைப்பணியில்
இன்பம் பலவுண்டென் றெண். 377

மார்க்க நெறிபேசி வையகத்திற் காசுபணம்
சீக்கிரத்தில் தேடிச் சிறக்கின்றார்—பார்க்கையிலே
நல்லவரைப் போல நடிக்குமந்த மானிடர்போல்
தொல்லுலகிற் கண்டதில்லை சொல். 378

சொன்ன மறையுணர்ந்து சுந்தரஞ்சேர் நாயகனை
எண்ணித் தொழுவதில்லை இவ்வுலகோர்—திண்ணமுடன்
காசதனைச் சேர்த்துக் களித்துத் திரிந்திடவே
ஆசுறுவார் என்னே அறை? 379

ஞான மடைந்துயர நல்லவுயர் நாயகனைக்
காணக் கனிந்து கருத்துடனே—தானுருகி
நன்கு வழிபடலே யல்லாற் பிரிதினால்
ஒன்றும் பெறுவ தில்லை. 380

நன்னயஞ்சேர் பொற்பணிகள் நாட்டமுட னேசெய்து
இன்னினிதே வாழல் இனிதாகும்—குன்னியிருந்
தொன்றும் புரியா துழன்று திரிவதுதான்
நன்றில்லை கண்டு நட. 381

நட்புடனே வேண்ட நலமுணர்த்தும் நாயகனும்
பெட்புடனே வந்து பெருமைசெய்வான்—விற்புருவ
மாதே இறையருளை மாணப் பெறுதார்க்குத்
தீதே பெருகுந் தெரி. 382

ஆதார மானவனே ஆண்டவனே சொல்லறிய
வேதாதி வேதம் விளம்பியோய்—பேதாதி
பேதங்கள் நீக்கி பெருமிதமாய் வாழ்ந்திடவே
போதங்கள் தந்தாள் புரிந்து. 383

சித்தாந்தத் துண்மை தெரிந்து தெளிவடைய
வித்தாந்த மேன்மை விரித்தறிய—புத்தமுத
ஞானப் பெருங்கடலே நன்றெனக்கு நீயருள்செய்
மோனத் தவத்தே முடிகி. 384

வேண்டும் விளக்கமெல்லாம் வித்தகமாய் தண்மறையில்
ஆண்டமைத்துத் தந்தாய் அளப்பரிதாய்—வேண்டியறிந்
திந்தப் புவிவாழ்வில் ஏற்றம் மிகவடைய
சிந்தனையை நன்றெனக்குச் செய். 385

மெத்தப் பணிந்துன்னை வேண்டுகிறே னாண்டவனே
சித்தமது வைப்பாய் திருவுடனே—எத்ததியும்
உன்னை நினைந்துள் ளுருகி வழிபடவே
என்னை வழிநடத்தென் றுமே. 386

தீனின் வழியைத் தெரிந்தொழுக மாட்டாது
வீணில் அலையுமிந்த வீணனைத்—தூணதனில்
கட்டி யடித்துக் கருத்தை அறிவுறுத்திக்
கெட்டியாய் வாழக் கிளத்து. 387

நல்லநெறி யுண்டு நலமான மாமறையில்
உள்ளி யுயர உணராது—எல்லையற்ற
ஆசைவழி பட்டிங் கடாத புரிகின்றாய்
மாசை யகற்று மதித்து. 388

நாடிப் பலநன்மை நாட்டமுட னேசெய்யும்
தேடற் கரிய திறமருள்வாய்—மாடெனவே
புல்லுண்டு வாழும் புரைமிகுத்த புல்லனை நீ
தள்ளி வெறுக்காதே தான். 389

எங்குளான் எங்குளான் எங்குளான் என்றிறையை
பங்கமின்றித் தேடியே பார்த்தேன்யான்—எங்கெங்கும்
இல்லையே நல்லோர் இதயத் திருப்பதல்லால்
நல்ல இறைவன் நயந்து. 390

நெஞ்சத்தில் வஞ்சமின்றி நேர்மை வழிநடந்தால்
அஞ்ச வருவதங் கொன்றிலையே—நெஞ்சத்தில்
வஞ்ச மிருந்தால் வழியெல்லாம் மாயந்தான்
துஞ்சுமட்டுந் தீராத் துயர். 391

கொஞ்சிக் குழைந்து குழந்தையிடம் பேசிடவே
அஞ்சுகம்போ லென்று மதுவளரும்—அஞ்சுமொழி
கூறி யதட்டக் குழந்தை நடு நடுங்கி
வீறியழு தோடும் விரைந்து. 392

பாவிகளைப் பார்த்துப் பயந்தஞ்சி ஓடாதே
பாவியவர் சொற்காய் நடுங்காதே—பூவிதனில்
வாழுமட்டும் பாவியரை வாட்டி வழியுணர்த்து
சூழும் இசைகள் சுடர்ந்து. 393

வேசம் பலபோட்டு வேண்டா வினையியற்றிக்
காசுபல சேர்க்கும் கயமையீர் !—தேசுபெற
வேண்டின் இனிதே வினைத்தூய்மை வேண்டுமே
தாண்டின் தகைமை கெடும். 394

நாணயமும் வேண்டும் நலமார் வினைவேண்டும்
ஊனநிலை போக்கும் இசைவேண்டும்—காணரிய
நல்லொழுக்கம் வேண்டும் நடையிற் சிறந்துயர்ந்த
இல்லொழுக்கம் வேண்டும் இனிது. 395

நல்ல குணவானாய் நானிலத்தில் வாழ்வாரை
வெல்லுந் திறமெவர்க்கு மேவுங்காண்—உள்ளவரை
குன்றின் சுடர்விளக்காய் கோதகன்றி வாழ்வொளியைக்
கண்டிடுவார் நல்லோர் கருது. 396

செய்ய திருவிருக்கும் சேர்ந்த இசைமிளிரும்
வையம்பரவி மகிழ்ந்திருக்கும்—தெய்வமுங்
கொண்டாடிப் போற்றும் குணமுயர்ந்த நல்லோரை
விண்டோருங் கொண்டாடு வார். 397

வல்லவனின் நல்லருளை வாகாய் இனிதடைய
உள்ளுருகி நன்றுதொழல் உத்தமமே—இல்லையெனில்
நாதியற்ற பேய்போல நானிலத்தி லேசுற்றி
வீதிநடு வில்மாய்வாய் விள். 398

ஐயமற நூல்பலவும் ஆராய்ந் தினிதோதச்
செய்யறங்கள் தோன்றும் சிறப்பாக—உய்யும்வழி
கற்றுக் கணித்தாய்ந்து கண்டதிரு நல்வழியில்
உற்றுநடந் தாலுயர லாம். 399

ஊற்றுநீர்க் கேணியதில் ஊறுநன்னீர் தானிரைக்க
சோற்றையள வுண்ணச் சுகம்வருமே—தேற்றமுடன்
தீமைகளை நீக்கித் தெளிவுபெற நல்லிறையைத்
தூய்மையுடனே வணங்கு வீர். 400

சோறுலே யாக்கை சுகம்பெறுமே நற்பயிரும்
நீராலே விளைந்து நிலையுயர்த்தும்—ஆறுலே
ஊருஞ் சிறக்கும் உயர்ந்த பெரியோரால்
பாருஞ் சிறக்கும் படி. 401

பிச்சை யெடுத்தும் பெரும்பணஞ்சேர் மானிடரே
நிச்சயமாய் ஈசன் நெருப்பதனில்—பச்சமின்றித்
தள்ளி மிதித்திடுவான் தாரணியிற் றீயவழி
உள்ளிப் பொருள்சேரா தீர். 402

அறஞ்செய்யும் மாண்பினரே ஆண்டவனைச் சேர்வார்
அறஞ்செய்யார் ஆழ்நரகத் தாழ்வார்—திறமறிந்து
நல்லறங்கள் செய்து நலம்பெறுவீர் இல்லையெனில்
புல்லராய்ப் போவீர் புரை. 403

பள்ளிபல கட்டிப் பலபாட மோதுவிப்பீர்
உள்ளியுள்ளி நல்லறங்கள் ஊக்குவிப்பீர்—சொல்லரிய
நாயகனை வேண்டித் தொழுகைசெய்ய நற்பள்ளி
நேயமுடன் கட்டல் நெறி. 404

கஞ்சாப் புகைத்துக் கதறித் திரிவோரே
கஞ்சாவா லாய பயனென்னே—கஞ்சாதான்
உள்ளங் கருக்கும் உடல்கருக்கும் நல்லறிவைப்
பள்ளத்தில் வீழ்த்தும் படி. 405

கஞ்சாப் புகைக்கக் கடுங்கவலை நீங்குமென
அஞ்சாது சொல்லுகிறுர் ஆய்வில்லார்—கஞ்சாவை
நஞ்சென் றுரைத்த நயமுணர்ந்தா லல்லவோ
அஞ்சுவார் கஞ்சாவுக் காங்கு. 406

பாட்டொருவர் பாடப் பலபேர் அருகிருந்து
கேட்டுக் கிருகிருத்துக் கீழ்வீழ்ந்து—நாட்டமுடன்
மற்றுமோர் தம்மடித்து மண்டை தனையுடைத்துக்
சுற்றியே வீழ்வார் சுளித்து. 407

கல்லாதார் நெஞ்சிற் கடவு ளிருக்காரே
கல்லாதார் சொல்லிற் கருத்தெதுவும்—நில்லாதே
கல்லாதார் மாமூடர் கல்லாதார் பொல்லாதார்
கல்லாமை நீக்கக் கடன். 408

நட்டார் பிழைபொறுத்தல் நட்பிற் கிலக்கணமாம்
ஒட்டார் தமைவிலக்கல் உத்தமமே—பட்டாங்கு
பேணி நடத்தல் பெருமையாம் தீதுசெய
நாணி ஒதுங்கல் நலம். 409

நல்ல இளமைப் பருவங் கடக்குமுன்னே
உள்ளுவந்து நற்கலைகள் ஓதிவிடு—இல்லையெனில்
கல்வி வளரா கலையுந் தெளிவுபெரு
செல்வம் பெருகா சிதை. 410

மாசு மனத்தினரை வைர ஒளியூட்டித்
தேசுபெற வைக்குந் திருத்தொழுகை—ஆசின்றிச்
செய்து சிறப்படையத் தெய்வ அருள்கொழிக்கச்
செய்துவிடு பள்ளி சிறந்து. 411

சிந்தித் தெதையும் தெளிந்துவிடு தேராமல்
மந்தனய் வாழல் மதிப்பில்லை—அந்தரமுஞ்
சென்றுலவி நிற்குஞ் சிறப்புடைய சிந்தனையே
நன்று தரு மென்று நவில். 412

வல்லான் திருநோக்கே வாழ்விப்ப தல்லாமல்
பொல்லாக் குறும்பர் புலைநோக்கோ—தொல்லுலகை
வாழ்விப்ப தாமோ மதிப்புடையீர் ! சிந்தித்துத்
தாழ்வகற்றி வாழ்வீர் தக. 413

உண்மை நெறியதனை உள்ளத் திருத்தாமல்
புன்மை மனத்திருத்தல் பொல்லாப்பே—நன்மைபெற
எவ்விடுக்கண் வந்தாலும் எப்போதும் உண்மைநெறி
செவ்வியதாய்க் கொள்ளல் சிறப்பு. 414

தங்கத்தோ டைம்பொன்னைத் தான்கலந்து விற்கின்ற
இங்கிதமில் மாந்தர் இருக்கின்றார்—மங்கிவரத்
தங்கத்தின் மாண்பும் தகாகலப்பின் புன்மாண்பும்
சங்கையின்றித் தானறிய லாம். 415

நன்மை பலவளிக்கும் நன்மைபல கூட்டுவிக்கும்
உண்மைநெறி யென்றே உரைத்திடுவோர்—உண்மையிலே
பொய்யும் புரட்டும் புரிந்துகெடுவார் சொல்லை
வையமறி தல்மாண்பாம் மற்று. 416

என்பிழைகள் நீக்கி இதயத்தைச் சுத்திசெய்து
துன்பகற்றி வாழத் தொடர்ந்தருள்வாய்—மண்பதைக்கு
வாழ வழிகாட்டும் வள்ளலே நீ யல்லால்
வீழும் உலகம் விரைந்து. 417

எங்கும் நிறைந்தவனை எண்ணித் துதித்துவிடின்
பங்க மகன்று பலம்பெருகும்—கங்கையுடன்
நற்றெருழுகை நல்லிறையை நல்லுளத்தில் வைத்திருக்க
உற்றவழி என்றே உணர். 418

நன்மை பெருகவென நாட்டமுடனே விமனில்
உண்மையுடன் கூற உயர்வுவரும்—செம்மை
ஒருமை மனத்துள் உயர்ந்தொளிரு மீசன்
பெருமை அருளெனவே பேசு. 419

என்னுளத்தை விட்டெங்கும் ஏகாம லென்றென்றும்
நண்ணி இணைந்திருப்பாய் நாயகனே!—உண்மையாய்
உன்னைத் தவிர்த்தொன்றை உள்ளவில்லை உள்ளத்தில்
என்னைக் கடைத்தேற் றிவண். 420

பள்ளியொன்று கட்டியே பார்த்து மகிழ்ந்திருக்க
உள்ளுகிறேன் எண்ணம் உருப்படவே—விள்ளரிய
மாதவா தேவா மயக்கம் தனையகற்றும்
போதகா நீயே புணை. 421

நன்றெனவே ஒன்றைநீ நாடி யறிந்தபின்பு
என்றும் அதைமாற்ற எண்ணுதே—வென்றிபெற
வேண்டின் உறுதிமனம் வேண்டும் நிலைமாறில்
தூண்டியிற் பட்ட கயல். 422

மாளாத் துயரடைந்தும் மற்றோர் துயர்துடைத்த
தாளாளர் கேண்மை தனையுணர்ந்து—ஞாலமிசை
தொண்டுபல செய்து துயரகற்றி வாழவைத்தால்
எண்டிசையுங் கிட்டும் இசை. 423

அஞ்சுவதஞ்சி அடங்கி நிற்கும் ஞானியாரைத்
தஞ்ச மடைந்தார்க்குச் சத்துண்டாம்—கொஞ்சமும்
ஞான உணர்வில்லா நாயனையார் தங்களுக்கிங்
கீனமே கிட்டும் இசைந்து. 424

கற்றோரே மேலோர் கருத்துயர்ந்தா ராதலினுல்
மற்றோரே கீழோர் மதித்தறிவாய்—முற்றாக
ஒன்று மறியாதார்க் கொன்று முயர்வில்லை
என்றுமுயர்ந் தோர்க்கலைஞ ரெண். 425

செல்வந் தனைத்தேடல் என்றுஞ் சிறப்பாகும்
செல்வ மிலார்க்கிரப்புத் தேடிவரும்—பல்வழியும்
செல்வமே சேமமது சேர்ப்பிக்கு மாதலினுற்
செல்வந் திரட்டவழி செய். 426

இப்புவியில் வாழுகின்ற மாந்தரெல்லாம் என்றென்றும்
தப்பின்றி நற்றொழுகை தானியற்றி—செப்பமுடன்
வாழல் கடமை மதிக்காதார் செய்கையிலே
ஊழல் மலிந்து விடும். 427

ஈயாத கஞ்ச இருட்டுளத்தார் தீயவர்க்கு
ஓயா துவந்தீவார் தம்பொருளை—பேயாக
வாழும் இவர்க்கென்றும் மாநரக மங்குமிங்கும்
சூழும் படர்ந்து சுனைத்து. 428

நல்லறத்தைக நன்றியற்றி நல்லிசையை நாடாதார்
புல்லறத்தைப் போற்றிப் புரிந்திடுவார்—தொல்லுலகில்
நன்றுசெய்யார் கெட்ட நரகடைவார் நன்றுசெய்வார்
என்றும் மகிழ்ந்திருப்பார் எண். **429**

கல்விப் பெருக்கத்தாற் காணப் பெருமைவரும்
செல்வப் பெருக்காற் றிருவளரும்—பல்வழியும்
கல்விப் பொருளும் கணித்தசெல் வப்பொருளும்
வல்வலிமை மிக்குடைய தாம். **430**

சித்தின் நிலையனைத்தும் தேறித் தெளிந்தவர்க்கு
மெத்தப் புகழ்வளரும் மேதினியில்—பத்தரையன்
தங்க மவரப்பா தண்கதிரார் மாமதிபோல்
எங்குஞ் சிறப்பார் இருந்து. **431**

சோதிச் சொரூபமதைச் சோதித்து நீயறிந்தால்
ஆதி யறியு மறிவுவரும்—பேதித்
திருந்தால் எதுவும் பெருமை கிடையா
வருந்தி யறிய முயல். **432**

வெள்ளம் வருமுன்னே மேவிக் கரைகட்டு
உள்ளம் கெடுமுன் உறுதிசெய்—பள்ளத்தை
நோக்கிச்செல் நீரெனவே நொய்மையை நாடுமுளம்
சீக்கிரத்தில் செம்மை வளர். **433**

எவ்வருடம் எம்மாதம் எந்நாளோ எவ்வழியோ
கவ்வ வருமெமனைக் கண்டறிவாய்—இவ்வுலகில்
யாரேனு மில்லா திருப்பதால் சீராகப்
பாரோர் புகழ்பணியைப் பார். **434**

சொல்லும் உயர்மொழியின் சூட்சமத்தை நீயறிந்து
அல்லும் பகலும் அயராதிங் குள்ளுருகித்
தேவனை வேண்டித் தெரிசித் திதம்பெறுவாய்
பாவ மகலும் பரிந்து. **435**

ஈகை தொழுகை இருக்கை உணர்கையிவை
வாகுபெறச் செய்பவர்கள் மானிலத்தில்—ஆகமஞ்செய்
தேவரே யாவார் தெரிந்துலக மாந்தரே
தேவராய் வாழ்வீர் தினம். **436**

ஈத்துண்ணும் பண்பதுதான் யார்க்கிருந்த போதினிலும்
நேர்த்தியிவர் வாழ்வு நிலைத்திடுமே-சீர்த்தியொடு
மண்ணுலகில் விண்ணுலக மாண்புகழைப் பெற்றிருப்போர்
எண்ணரிய நல்லறஞ்செய் வார். 437

நட்பின் நலமறிந்து நாளும் எவருடனும்
நட்பியற்றிவாழல் நலமாகும்—நட்பில்லா
மாந்தர் உலகில் மரம்போற் கிடப்பராற்
சாந்துணையும் நட்புநிலை சார். 438

ஏனிப் படியிங் கிழிவுநிலை மேவுகிறீர்
மானப் பதங்கெடுத்தல் மாண்பாமோ ?-தோணியின்றி
ஆற்றைக் கடத்தல் அறிவுடைமை யாகுமோ?
சேற்றைப்பூ சாதீர் தினம். 439

தெய்வம் பலவுண்டென் றேயிங்கு செப்புகிறார்
தெய்வநிலை காணாத் தெளிவிலார்-தெய்வமது
ஒன்றே எவர்தொழிலும் ஒன்றே எனநினைந்து
நன்றே பணிமின் நடந்து. 440

தெய்வமது உண்டெனத் தேரின் தெளிந்துநீர்
தெய்வப் பணிகள் தினஞ்செய்மின் - உய்யுவழி
ஈதே இதையறிய எண்ணா திருப்பரேல்
தீதே பெருகுந் தினம். 441

தேடுவது புண்ணியமாம் தேய்ப்பதுவோ பாவமதாம்
கூடுவது நல்லோர் குணங்கொள்ள-நாடுவது
ஈசனடி யாகும் இனிய உலகத்தீர்
பூசனையால் என்றும் புகழ். 442

கண்ணற்ற மாகுருடன் போலக் கருத்தழிந்திங்
கெண்ணற்ற தெய்வமதை இங்கியற்றி-உண்மைநிலை
காணா தலைவதனாற் காணும் பயனுண்டோ?
மாணாப் புவியை மதித்து. 443

தக்க தகுதிபெரு தாரிங்கு நற்றலைமை
எக்காலமும் ஏற்றல் இழிவாகும்-பக்குவங்கள்
பெற்றபின்பு நற்றலைமை பேணி இனிதேற்றிங்
குற்றபணி செய்வீர் உவந்து. 444

காமக் குளத்திற் களித்து விளையாட
சேமக் குறைவுண்டு தேறுவீர்-ஏமமது
எய்த உளமடக்கி என்றுந்தீக் காமமறுத்
தெய்துவீர் ஞான இடம். 445

நாளையோ வின்றோ நமனைநாம் நாடுகின்ற
வேளை யறிவீரோ! மேதைகளே-மூளையின்றி
ஒன்று மறியா திருக்க உரிமையில்லை
சென்றறிவீர் உண்மைத் தெளிவு. 446

விட்டுயிரும் ஓட விளங்கா மனிதருடல்
கட்டையிலே போகுங் கபருக்கே-மட்டிகளே
கண்ணு விதைக்கண்டும் காணார்போல் வாழுகிறீர்
என்னாகும் பின்னே இயம்பு ? 447

இவ்வுடலை மெய்யென் றினிதெண்ணி வாழாதீர்
செவ்வியறி யாமுன்னே தேய்ந்துவிழும்-எவ்வமற
எந்நாளும் வாழ்க்கையறம் இங்கியற்றி வாழுவதே
பன்நாளும் நன்மை படி. 448

தூலமொடு சூட்சமமும் தூசகன்ற காரணமும்
சீலமொடு நீயறிந்து தேரப்பா—ஞாலமிசை
மூன்றின் நிலையுணரார் மோன நிலையகன்று
தூண்டியில்மீ னுவார் துடித்து. 449

நல்லறிவு நூல்பயில நாளெல்லாம் நன்மையுண்டு
புல்லறிவு நூல்பயிலப் போக்கறுமே—உள்ளுயரக்
கற்றுக் கடமைசெய்து காரணங்கள் தானறிந்து
வெற்றிபெற வாழ்வீர் விரைந்து. 450

ஆசைப் பெருக்கா யலைந்து திரிந்துழன்று
பூசை புரியும் பரிவுமின்றித்—தோசிகளாய்
நாளைக் கடத்தும் நலமில்லா மானிடரே
மூளையுண்டா சொல்வீர் முயன்று. 451

காசைப் பணத்தைக் கடுகித் தினந்தேடி
ஆசைப் பெருக்கா லலைவதோ—மாசை
அகற்றத் தினமும் அறிவோடு தெய்வ
மகத்துவந் தேர்வீர் மகிழ்ந்து. 452

சிங்காரக் கன்னிதனைத் தேடி மனையாக்கி
மங்காப் புகழுடனே வாழுகிறீர்—இங்கோதச்
சிங்கார நாயகனைத் தேடிநீர் சென்றதுண்டோ
எங்கேயும் வாழ்க்கை இயல். 453

நாளையெனச் சொல்லியுயர் நற்கருமஞ் செய்யாமல்
வேளை கடத்தல் விளங்காதார்—மூளையுறு
செய்கையாம் நல்லோர் தேகநிலை தானுணர்ந்து
செய்வனவன் றேசெய்கு வாய். 454

உன்னால் இயன்ற உதவிகளை மாறாமல்
எந்நாளும் செய்க இனிதாக—மன்னவனும்
வேந்தனும் போற்றி விருப்பாய் வரவேற்பான்
ஏந்திச்செய் நன்மை இனிது. 455

அறங்காக்க வேண்டும் அவனிவாழ் மாந்தர்
புறம்போக்க வேண்டும் புரிந்து—வரங்காக்க
நற்செயல்கள் வேண்டும் நலமுடனே இங்குலவத்
தற்பரனின் நல்லருள்வேண் டும். 456

கொண்ட மனையாளைக் குற்றுயிராய் வாட்டாமல்
என்றும் அவட்கினிய இன்செய்மின்—கண்டவர்கள்
போற்றிப் புகழும் வகைத்தாய் மனைவியைக்காப்
பாற்றிவரப் பண்பாம் பணி. 457

நல்லார் உலவுகின்ற நாடெல்லாம் பொன்விளையும்
பொல்லார் உலவுகின்ற பூமிதனில்—கல்லோடு
சேறுஞ் சிறுதுரும்புஞ் சேர்ந்து விளையுமே
ஆரும் மதிக்கா ரிதை. 458

நல்ல நடத்தை நயமான சொல்லினிமை
உள்ளவரை யாரும் உவந்தேற்பார்—கள்ள
உளமும் கயமையும் ஊதாரிப் போக்கும்
நலமிழக்கச் செய்யுமென நாடு. 459

ஐம்புலனை வென்றடக்க ஆண்டகையாய் வாழ்ந்திடலாம்
ஐம்புலனைக் கட்டா தலைந்திடிலோ—வெம்புகரி
யன்ன தகைத்தாய் அடங்காத் தனஞ்செய்து
பின்னப் படுத்தும் பெரிது. 460

ஆதியெனுஞ் சோதி அடங்கியுன துள்ளிருக்கப்
பேதித்து வாட்டல் பெருங்குற்றம்—நீதியுடன்
உள்ளொளியைப் போற்றி உனதறிவின் மாசகற்றி
விள்ளரிதாம் வாழ விரும்பு. 461

வாக்கைப் புரட்டிடவே வாழ்வும் புரண்டுவிடும்
வாக்கைப் புரட்டாதே மானிடனே—ஊக்கமுடன்
நாக்கைப் படைத்த நிமலனுக்கு நன்றிசெய
வாக்கைப் புரட்டாதே மற்று. 462

தன்னைக் கடவுளெனத் தானறிந்து கொண்டார்க்குப்
பின்னே ஒருகடவுள் பேசவுண்டோ—கண்ணே
இதுவு மதுவு மெதுவென் றறியார்க்
கெதுவுங் கடவுளில்லை எண். 463

மனித னறுமுயிர்க்கும் மற்றவுயிர் கட்கும்
புனித மறிந்தாலே போதும் இனிதாக
நாய னருளறிவாய் நல்ல மறையறிவாய்
காய மறிவாய்க் கருதி. 464

நல்ல தபஞ்செய்ய நாட்டமுள நல்லோரை
பொல்லாப் பசிவந்துப் புகுந்ததினால்—உள்ள
தவமிட் டொதிங்கித் தவிக்கின்றார் அல்லாற்ற
பவவிட் டொதுங்கவழி பண். 465

புத்தாடை கட்டிப் புதுமணங்கள் பூசிநல்ல
கர்த்தாவைப் போற்றிக் கருத்துடனே—இத்தரைமேல்
அன்பை யடைக்கலமாய் ஆக்கி யதன்படியே
பண்பில் வளர்ந்திடவே பார். 466

தலையன்பு கொண்டு தலைவனையே வேண்ட
மலையன்போ டவான் மதிதான்—விலையன்பு
உள்ளவனைத் தள்ளி உதைத்தே வெளிப்படுத்தி
வல்லவனை அன்பில் மதி. 467

பேரன்பு கொண்டு பிரியமுடன் இல்லானை
ஏரணங்காய் எண்ணி இனிமையுடன்—காரணனை
ஒன்றாகச் சேர்ந்திங் கொழுங்குடனே வேண்டிவர
நன்றாக ஈவான் நலம். 468

உத்தமராம் நாயகமும் உண்மையுடன் வாழ்ந்துள்ளார்
சித்தர்நபி பாதைவழி தேரப்பா சித்தமுடன்
அவ்வழியிற் சென்றால் அருள்மிகுத்த நம்மிறைவன்
செவ்வியெல்லாம் யீந்துவப்பான் தேர். 469

விண்ணுக்கும் மண்ணுக்கும் வேந்தனென உள்ளவனை
தன்னுக்கு ளெண்ணித் தவஞ்செய்ய-முன்னுக்கு
வந்து வரமருள்வான் வாகாய் நலம்பெறுவாய்
கந்தமலர்க் கோதாய் கணி. 470

சோற்றுடம்பு வீழுமுன் துய்ய மனதுடனே
சாற்றிப் பலநன்மை சார்ந்துசெய்-காற்றகல
நாறுமிந்தப் புன்குரம்பை நாடி இனிதறிந்து
வீறுபெற நாளும் விரும்பு. 471

கண்பார்க்க எத்தனைபேர் கண்மூடி விட்டார்கள்
கண்பார்க்க எப்பொருளைக் கைக்கொண்டார்-கண்பார்க்க
நாற்ற உடம்பைத்தான் நாம்பார்த்தோ மல்லாமல்
தேற்றமெது முண்டோ தெளி. 472

ஞான முனிவர்களும் நல்ல புலவர்களும்
பேணி உரைத்தமொழி பேணிடுவீர்-வீணிலிதை
ஏளனமாய் எண்ணி இகழாதீர் பின்னுமையே
காலமெல்லாங் குத்துங் கதித்து. 473

தேடிப் புதைத்தபொருள் தெய்வத்திற் காகாதே
நாடிக் கொடுத்தபொருள் நாளைவரும்-பேடியென
வாழ்ந்தாலே துன்ப வறுமை கொடுமைவரும்
சூழ்ந்தாய்ந்து வாழச் சுகம். 474

புண்ணியமுங் கண்ணியமும் பூரிப்பாய்த் தான்செய்ய
நன்னயமாய் இன்ப நலம்பெருகும்-புண்ணியம்விட்
டிவ்வுலக மாந்தர் இருந்திடிலோ பின்னுலிற்
கவ்விவிடும் துன்பங் கடிந்து. 475

சொல்லும் பொருளும் தொடர்பும் இனிதறிந்து
நல்லபடி வாழல் நமதுகடன்-உள்ளவரை
நீதிமுறை பேணி நிலமதிலே வாழ்ந்துவர
சோதியொளி தோன்றுஞ் சுகம். 476

தன்னால் இயன்றதெல்லாம் தக்கார்க்குத் தானளித்தால்
பொன்னான ஞானப் பொருள்பெருகும்-இன்னாத
பாவிகட்குத் தண்டப் பகட்டருக்குத் தானளித்தால்
நாவிதனி லேகலந்த பால். 477

தத்துவத்தைப் பேசித் தவறிவழி போகாமல்
தத்துவத்தில் நின்று தரமுயர்த்து-தத்துவமே
சீவனை ஞானச் சிகரந் தனிலிருத்தத்
தேவனிடம் சேர்க்குவிக்கும் தேர். 478

ஒன்று யுலகில் உலவும் பரம்பொருளை
உண்டென்று நம்ப உயர்வாகும்-மண்டெனவே
வாதம் புரிந்து மறைநெறியைத் தான்துறந்து
வேதனையால் வீழாதே வீண். 479

ஐம்புலனை வென்றவனை யாருமிங்கு வெல்லாரே
ஐம்புலனை வெல்லல் அறிவுடைமை-ஐம்புலனை
வென்றடக்க மாட்டாதார் வேதனையாம் பாழ்ங்கிணற்றில்
சென்றுவீழ்ந் தாழ்வார் தினம். 480

மெய்வாய்கண் மூக்கு செவியென்னும் ஐம்பொறியின்
செய்கைவழி செல்லல் சிறப்பில்லை-உய்யவெனில்
ஐம்புலனை ஆசை அனைத்தையும் கட்டிவிடு
செம்பொருளைக் காண்பாய் தினம். 481

சற்குருவை நாடிச் சகல கலையுணர
விற்பனர்கள் போற்றுமுயர் மேன்மைவரும்—அற்பர்தமை
நாடிப் பழகிவர நல்ல நிலைதவிர்ந்து
பேடியென ஆவார் பெரிது. 482

ஞானம் பெருக நலமும் பெருகிவரும்
தானம் பெருகத் தவம்பெருகும்—ஈனம்
பெருகப் பிழைபெருகும் பேதையரால் தீமை
பெருகும் பெருகுமெனப் பேசு. 483

காசுபணங் கூடக் கருத்தின் நிலைமாறித்
தோசியென வாழல் சுகமில்லை-காசுபணம்
கூடிவர நன்மைபல நாடியுடன் செய்திடுதல்
பீடுடையார் செய்கையெனப் பேசு. 484

குன்றனை செல்வம் குவித்து மகிழ்ந்தாலும்
பன்றி யனையார் பதமுணரார்-கண்டபடி
வீணே நடந்து விளங்காத் தனம்புரிந்து
கோனை மறப்பார் குறித்து. 485

வாயடக்க முள்ளார் மாண்பு மிகப்பெருவார்
வாயடக்க மில்லார் மதிப்பழிவார்-பேயடக்கும்
மந்திரங்கள் கற்றவரை வாட்டுமோ பேய்களிங்கு
இந்தநிலை கண்டுயர எண். 486

நன்மையும் தீமையும் நாடிவரும் யாவருக்கும்
செம்மையுட னேயிவற்றைத் தேர்ந்தறிமின்-இம்மையிலே
தீமைக்குத் தீமைவரும் செய்யுமுயர் நன்மைக்குச்
சேமம் பெருகுமெனச் செப்பு. 487

நாகாக்க வேண்டும் நன்மை தனையடைய
நாகாக்க வேண்டும் நலம்பெறவே நாகாக்க
மாந்தர் துயரடைந்து மண்ணில் வருந்துவரால்
சாந்துணையும் நாகாக்கத் தான். 488

முற்றும் துறந்த முனிவர் தமைக்காணின்
பற்றுடனே சென்று பணிந்துவிடு-நற்றவமாள்
சான்றோர் மகிழ்பணிகள் தானியற்றல் கற்றவர்க்கு
ஆன்றோர் வகுத்த முறை. 489

நெஞ்சில் துறவார் துறந்தார்போல் வேடமிடும்
பஞ்சையரை நம்பாதே பாவமடா-கஞ்சனையே
வள்ளலெனச் சொல்லல் வகைகெட்ட தன்மையதாம்
எள்ளறிந்து எண்ணை யடு. 490

இங்கொன்று கேட்டதனை ஏற்றி மிகப்புனைந்து
அங்கொன்றுய்ச் சொல்வோர் அறிவில்லார்-பங்கமதாய்ச்
சொல்லுகின்ற சொல்லால் துயரம் பெருகுவதை
நல்லவரே காண்பார் நனி. 491

ஏய்த்துப் பிழைக்கின்ற எத்தருக்கு எப்போதும்
சாய்த்து நடக்காதே தாரணியில்-பேய்த்தனத்தை
நெஞ்சுயர்த்தி நாளும் நீயெதிர்த்துப் பேசிடுவாய்
அஞ்சுவது பாவம் அறி. 492

வல்லான் அருள்நினைந்து வாழுமுயர் நல்லோர்க்கு
எல்லா நலமும் இனிதுவரும்-அல்லாதார்
பொல்லாச் செயலாலே பொய்த்தனங்கள் மிக்கியற்றி
நல்லாரை வஞ்சிப்பார் நன்கு. 493

எண்ணமே வாழ்வாம் இதயமாம் என்பதனை
திண்ணமாய் நம்பித் தினந்தினமும்-எண்ணமதை
நல்ல வழிநடத்தின் நல்ல சிறப்புவரும்
உள்ளபடிச் சொன்னேன் உணர். 494

பத்திப் பெருங்கடலிற் பாங்காய்க் குளித்துவரை
முத்திநலங் கூடி முயன்றுவரும்-இத்தரையில்
பத்தியே மேலாம் பதமளிக்கு மாதலினால்
பத்தியே முத்தியின் தாய். 495

நாடாளும் மன்னவனும் நற்றவத்தார் பற்றுமுக்தி
வீடாளும் வேந்தனுக்கீ டாகுவரோ—போடாபோ
எல்லா முயர்த்தும் இறைவனே எவ்வுலகும்
வல்லான் பெரியனென வாழ்த்து. 496

ஞானச் சுடரொளியாய் நல்லார் விழைதிருவாய்
காணக் கவின்பொருளாய்க் காட்சிதந்து-மானிலத்தார்
கொண்டாடிப் போற்றும் குருவாகி விண்ணவரும்
கண்டேத்த வீற்றிருப்பான் காண். 497

நல்லார் தொடர்பதுதான் நாளும் நலம்பெருக்கும்
அல்லார் தொடர்பிங் கவலமே—உள்ளபடி
சந்தனத்தைப் பூசிச் சபைசெல்வ தல்லாமல்
வெஞ்சணத்தைப் பூசியோ விள். 498

சான்றோர் தமையடைந்து தக்க தறிந்திடுவாய்
ஆன்றோர் முறைக்கடிய ளாகியே-வேண்டிப்
பணிந்து நடந்து பதம்பெறுவாய் நாளும்
கனிந்திருந்து வாழக் கருதி. 499

பணத்தளவே யாகுமாம் பாருலகில் இன்பம்
குணத்தளவே யாகுமாம் கொள்கை-இனத்தின்
உறவளவே யாகுமாம் ஒற்றுமையும் பண்பும்
துறவளவே யாகுந் துணை. 500

# செந்துறை வெண்பா

## இரண்டாம் பகுதி

### காப்பு

பொன்றுத வேதம் புகழ்ந்த முறைப்படியே
நன்றாக நீதிநெறி நானவில—குன்றாத
நல்லருளைத் தந்தினிது நாயகனே காத்தருள்வாய்
வல்லமையா லென்றும் மகிழ்ந்து.

### பாடல்

ஞானமில்லார் தன்னைத்தான் ஞானியெனக் கூறிடுவார்
தோணியில்லார் ஆழ்கடலைச் சுற்றுவரோ?—நானிலத்தில்
வீணே உளராதீர் மெய்யறிவைப் பெற்றுயர
மேனூல்கள் கற்பீர் விரைந்து. 1

கவிபாடி என்னபயன் காணப் புவியில்
தவிப்பாரே யன்பற்றுத் தங்கி—உவப்புடனே
மாந்தர் மதியாரே மன்னவனுந் தான்விரும்பான்
ஏந்துந் தொழுகையிலா ரேல். 2

நாயகனை நம்பியக்கால் நல்லபல னுண்டுலகில்
மாயவனை எண்ண மறவாதே—தாயகத்தில்
தன்கூடு நிற்கும்வரை தான்நம்பி யேதொழுதால்
நண்போடு நல்லருள்கூ டும். 3

செத்தபின்பு போற்றிச் சிறப்பித்திங் கென்னபயன்
நத்தியிது செய்தல் நலமில்லை—புத்தியுடன்
நல்லார் உயிர்வாழும் போதவற்கு நன்றுசெய்தல்
எல்லார்க்கும் நன்றாம் இயம்பு. 4

தஞ்சமென்று நாடிவந்தார் தங்களுக்குத் தீதுசெய
வஞ்சமுட னெண்ணிடுதல் மாண்பில்லை—கொஞ்சிமிக
நன்முறையி லோம்பி நலமியற்றிற் பூவுலகம்
அன்புடனே வாழ்த்தும் அறி. 5

தேடுபொருள் தேய்த்துத் தினமிங்கே ஊர்திரிந்தால்
கூடுவிழும் போதென்ன கூடிவரும்—தேடுவதில்
தேவைக்குத் தக்கச் செலவழித்து மீதமதை
கோவைசெய்து காப்பாய் குறித்து. 6

கூடப் பிறந்தாலும் கூடுவிட்டு காற்ருேட
நாடித் தொடர்பவரார் நன்மகனே !—பாடைகட்டி
நல்லுடம்பை ஊர்சுமக்க நல்லுயிரைத் தேடிவரும்
இல்லிருந்து செய்தவமா மெண் 7

கட்டியுள்ள வீடதனைக் கண்டுபல ஓட்டைசொலப்
பட்டி முழுதும் பரக்குமே—இட்டமுடன்
செய்கின்ற நற்பணியை சீர்கெடுக்க முந்துபவர்
மெய்யறிவு இல்லா தவர். 8

பள்ளிபல கட்டிடுதல் பாடசாலை ஆக்கிடுதல்
உள்ளுயரச் சத்திரங்க ளோம்புவது—விள்ளரிய
நல்லறங்கள் செய்குவது நல்லோரை நாடுவது
சொல்லரிய பண்பெனவே சொல். 9

காசற்ற போதினிலும் கண்ணியத்திற் கண்ணுகை
மாசற் றிருத்தல் மதிப்பாகும்—தேசுகெட
புன்செயல்கள் பற்றிப் புரிந்து கெடுவதுதான்
அன்பற்ருர் செய்கை அறி. 10

பஞ்சணையில் தூங்கும் பணக்கார மானிடரே
பஞ்சையரைப் பாடாய்ப் படுத்தாதீர்—அஞ்சியவர்
பிள்ளைமனை யாவருமே பேய்ப்பசிகொண் டேயலைய
கொள்ளுமின்பம் நன்றில்காண் உன். 11

மண்ணிற் பிறந்தபயன் மாதவங்கள் செய்திடவே
விண்ணடைய நல்ல வியனறங்கள்—உன்னதமாய்
செய்திடுதல் நல்லறிவு தேடிடுதல் இத்தனையும்
வையகத்திற் கின்பம் வரை. 12

நட்பால் நலன்பெருக்கி நாடோறும் வாழ்ந்திடலாம்
அற்பத் தனத்தாலிங் காவதென்ன ?—உட்பகையை
வெட்டி மிதித்துவிட்டு வேந்தனையே நன்றுதொழ
மட்டில்லா வாழ்வுவரும் வாழ். 13

புத்தியுள்ள மாந்தர் பொறுத்திடுவார் கோபமதை
புத்தியில்லா மாந்தர் பொறுப்பரோ—நத்திமிகச்
சண்டை பிடித்துத் தலையுடைத்து நீதிமன்றம்
சென்றுபொருள் யீந்தழிவார் சீ. 14

நல்லறங்கள் செய்திடுதல் நன்மையடா எக்காலும்
நல்லறங்கள் செய்யாதார் நன்றில்லார்—இல்லறத்தில்
இங்கினிது வாழ்தல் இயலறங்கள் செய்வதற்கே
பங்கமின்றிக் கொண்டுணர்வாய் பார்த்து. 15

வாழ்வதனில் வெற்றிபெற வல்லமைகள் தான்வேண்டும்
வாழ்வைத் துவக்குமுன்னே மாதவனின் – தாழ்பணிய
வந்து குவியுமடா வாகான வெற்றிபல
சந்ததமும் உண்மையிது தான். 16

நன்மனத்தாய் வேண்ட நலமான நம்மிறைவன்
உன்மனத்துள் நல்ல உவப்புடனே—வந்தமர்ந்து
ஊட்டுவான் நல்லருளை ஊட்டுவான் ஞானமெலாம்
வாட்டுவான் தீமை மதி. 17

நன்மனிதர் போல நடிக்கின்ற கீழவர்கள்
புன்மனிதர் என்றுபலர் பேசிடவே—பின்னடைந்து
வாழ்வுகெட்டு வீழ்ந்து வளமற்றுப் போய்விடுவார்
தாழ்வுவரும் பொய்நடிப்பிற் ருன். 18

இவ்வுலகில் பேசுதற்கு எத்தனையோ நன்மொழிகள்
செவ்வியுட னேயிருக்கத் தேசில்லார்—கௌவையுடன்
காய்மொழிகள் கூறிக் கடுப்பாரே அந்தந்தோ!
நாய்போல்வார் இன்னுர் நகை. 19

நாயகனை வேண்ட நலமுண்டு எக்காலும்
தாயனையன் செல்வத் தருவனையன்—ஆயபுவி
வாழுகின்ற மாந்தரெல்லாம் மாயவனை யேதொழுதால்
நாளுமருள் கூடுமென நம்பு. 20

கண்டவரை எல்லாம் கயவரென எண்ணிடுதல்
மண்டுகளின் செய்கையடா மானிலத்தின் - கொண்டவுயர்
நல்லொழுக்கத் தாலுயர்ந்த ஞானியரும் உண்டுலகில்
உள்ளுயர்வு கொண்டிங் குணர். 21

உருவிற் சிறந்தார் உள்ளங் குறைவுடையார்
அறிவிற் சிறந்தார் அழகு—சிறிதில்லார்
எல்லாமும் எல்லா ரிடத்தும் இருக்காது
நல்லா இதனையே நாடு. 22

கள்ளச் சிறுக்கியரின் கால்பிடித்துக் கொஞ்சிடுதல்
புல்லரவர் செய்கையடா பூதலத்தில்—நல்லவுயர்
மங்கையரைக் கட்டுவது மாண்பறிந்தார் செய்கையென
சங்கையின்றித் தானுணர்வாய் தான். 23

மாது நெருங்கிவர மாருட்டம் போடுகிருர்
மாதுதரும் தீதை மனத்தெண்ணுர்—ஓதுகிறேன்
நாகம் படம்விரிக்க நல்லழகு தோன்றுமது
சாகவைக்குந் தீண்டிடிலோ தான். 24

ஆறறிவு பெற்றிருந்தும் ஆயறிவை விட்டதனுல்
சீரழிந்து மாந்தர் திரிகின்றுர்—தேறிநிதம்
சிந்தனைகொண் டேநன்று தீதறிந்து வாழ்ந்திடுவாய்
பந்தம் பெருகப் பணிந்து. 25

உள்ளுவது யாவும் உயர்வாக எண்ணிடுவாய்
கள்ளமுள்ள நெஞ்சு கருவறுக்கும்—சொல்லிமுறை
கண்டுணர்ந்து உள்ளம் கலக்கமற்றுத் தூய்தாகக்
கொண்டுவிடு என்றும் குணம். 26

மண்ணுடலை நம்பி மதித்திடுதல் நன்ருமோ
என்னுண்டு காலம் இனிதோட—உன்னிடுவாய்
யாவும் அழிந்துவிடும் ஆதலினுற் சாகாத
நாவால் நலங்கள் புரி. 27

எண்ணத்திற் பொய்மை எடுத்தெறிதல் நன்மையடா
எண்ணத்தில் உண்மை இருத்திடிலோ—பொன்னெத்த
மாண்பு வளர்ந்து மதிப்புப் பெருகுமடா
நோன்பென் றிதனை நுவல். 28

சங்கைக் குரிய சமத்துவத்தை இவ்வுலகில்
எங்கும் நிலைநாட்டல் ஏற்படைத்தாம்—இங்கிதுவால்
நாடிவரும் 6ன்மையெலாம் நல்லபுகழ் தானேங்கிப்
பாடிவரும் நல்வாழ்வு பார்! 29

கல்விக்கு மேலாம் பொருளில்லை காசினியிற்
கல்வியே செல்வங் கனிவிக்கும்—கல்வியே
நல்லறிவை ஊட்டுவித்து நல்லொளியை நாட்டுவிக்கும்
அல்லலறக் கல்வியறி யன்றி. 30

அந்தமுள்ள நாயகனை அன்புடனே எண்ணிவிடச்
சிந்தனையில் வந்தே சிறந்திடுவான்—பந்தமுடன்
காலையிலும் மாலையிலும் கண்டிப்பாய் நீதொழுதால்
சாலவருள் யீவான் தக. 31

மக்களுக்கு நற்சேவை மாண்புடனே செய்துவர
தக்கபல னீவான் தருணத்தில்—ஹக்கனவன்
சொர்க்கந் தருவான் சுகந்தருவான் ஆதலினால்
நற்பண்பு கொண்டு நட. 32

ஆண்டவனே எங்கும் அருள்பரப்பும் நல்லவனே
ஆண்டவனே எம்மையினி தாள்பவனே—ஈண்டினிது
எல்லோரும் நல்லவராய் எப்பொழுதும் வாழ்ந்திடவே
வல்லவனே யீவாய் வளம். 33

சித்தாந்த ஞானஞ் சிறப்புறவே கற்றாலும்
அத்தாவை நாடாக்கால் ஆவதென்ன—பக்தியுடன்
அல்லாவை வேண்டியவன் அன்படியார் தம்மையுமே
சொல்லாற் புகழச் சுகம். 34

கற்றோரைக் கண்டு கனிவாக வேபேசி
பற்றோடு அன்னவர்பா லேபழகு—நற்றேனாய்த்
தித்திக்குங் கற்றோர் திருவான நன்நட்பு
எத்திக்கும் போற்றும் இசை. 35

நாடு வளர்ச்சியுற நல்லறங்கள் பீடுபெற
ஏடறிந்தோர் தங்கட் கினியசெய்தல்—நாடிடவே
அன்பு வளரும் அறம்வளரும் ஆதலினால்
நண்புகொண்டு கற்றவரை நாடு. 36

ஊரைச் சிறப்பிக்க உண்மையுள்ள நற்றொண்டர்
பேரைக் கருதாமற் பெட்புடனே—வீறுடைய
தொண்டு புரியத் துடித்தெழுதல் நன்மையெனக்
கண்டறிய இன்றே கருது. 37

சாதி உரைக்காதே சாத்திரத்தை மோதாதே
பேதலித்து நெஞ்சம் பிழையாதே—ஓதுமுறை
கண்டு கடைப்பிடித்து கண்டாரும் நல்லறங்கள்
கொண்டுலகில் வாழல் குணம். 38

தூக்கத்தைக் கொண்டலுப்பைத் தூர விரட்டாக்கால்
சீக்குவந்து கல்லுடம்பைத் தேய்த்திடுமே—காக்காமற்
காசுபெறும் ஏக்கத்தாற் கண்ணயரா தேயுழைத்தாற்
தேசகன்று போகுந் தெரி. 39

நற்றமிழை எந்நாளும் நானிலத்தி லேவளர்த்தல்
கற்றவரின் மேலாங் கடமையாம்—நற்றமிழைப்
போற்று திருக்கும் புலவர் புலவரோ
கூற்றுந் தமிழ்க்கெனவே கூறு. 40

வஞ்சகத்தை வைத்து வழிபார்த்துப் பேசுகின்ற
நெஞ்சுடையார் பக்கம் நெருங்காதே—அஞ்சாமற்
கத்திகொண்டு குத்திக் கழுத்தை முறித்திடுவார்
பித்தரென நீயகன்று போ ! 41

பக்கத்தி லேயிருந்து பார்த்தறிந்து வஞ்சகர்கள்
பக்குவமாய்ச் சொல்லிப் பறையடிப்பார்—பக்குவமாய்
வையகத்தில் நல்லவரை வாய்மையிலே கண்டறிந்து
பொய்யகத்தில் பொய்வாழ்வு போற்று. 42

சாத்திரங்கள் கற்றுத் தகுதி அறிந்தாலும்
பாத்திரத்தை ஏந்திப் பழகாதே—ஆத்திரமும்
எக்காலும் வேண்டாம் இருக்கின்ற மண்ணுலகில்
ஹக்கனென்ற எண்ண மடை. 43

பற்களைக் காட்டிப் பணம்பிடுங்க வேதிரியும்
விற்புருவ வேசையர்பால் மேவாதே—கற்கண்டாய்
வாயினிக்கப் பேசி மனமதையே மாற்றிவிடும்
பேயவர்கள் பெண்மை யிலர். 44

பாசமுட னிவ்வுலகிற் பாட்டெழுதி நம்மிறையை
நேசமுட னேதொழுதால் நேரில்வந்து—வாசமுடன்
நற்கவிதை கேட்டு நலமீவான் பத்தருக்கு
அற்பர்தமைப் பாடாதே யாங்கு. 45

நாடித் தொழுதுவர நம்மிறைவன் நாளைக்குத்
தேடிப் பலனீவான் தேறிவிடு—ஓடியெங்குஞ்
சுற்றித் திரிந்தாற் சுகமுண்டோ தூய்மையுளம்
பெற்றுயர நற்றெழுகை பேண். 46

நல்லபல எண்ணி நாட்டோர்க்கு நன்றுசெயல்
உள்ளுயர்ந்தார் தங்கள் உயர்கடனும்—புல்லர்களின்
வீண்முயற்சி சொந்த விருப்பினிலே சுற்றிவரும்
ஏன்பிறந்தார் இன்னவரிங் கே. 47

தன்முயற்சி கொண்டு தளராப் பணிபுரிய
நன்மைபல சூழ்ந்து நலம்பெறுமே—இன்மையெலாம்
ஓடி ஒளிந்துவிடும் ஒண்டோடிய அப்பொழுதே
பீடு பெருகிவரும் பேசு. 48

ஆசையென்ற பேயால் அலைக்கழிந்து ஓடுகிறீர்
பூசைதனை விட்டுப் பிரியமுடன்—நேசமனம்
கட்டிவைத்துக் காரும் கணக்கறிந்து இவ்வுலகில்
வெற்றிகிட்டும் மென்மேலும் விள். 49

வீடென்றும் காடென்றும் வேடிக்கை தாமென்றும்
நாடெங்குஞ் சுற்றி நடப்பதால்—பீடுண்டோ
ஓரிடத்தி லேயிருந்து உத்தமமாய் நல்லிறையை
சேரிடத்தைத் தேறிச் செறி. 50

ஆதி அருட்சக்தி ஆர்வமுடன் நெஞ்சிருக்கும்
சோதியெனுஞ் ஞானச் சுடர்பரப்பும்—நீதியுடன்
வேண்டித் தொழுவார்க்கு வேணரவங் கூடிவரும்
ஈண்டறிவாய் பக்தி இயல்பு. 51

உள்ளத்தி லெண்ணி உயர்வான மந்திரத்தை
சொல்ல உடன்வருவான் தூயபரன்—நல்லபள்ளிக்
கூடத்தி னுள்ளிருந்து கூப்பிட்ட போதினிலே
தேடித் தருவான் திறம். 52

நண்பனென்று ஆண்டவனை நாடித் தினம்பணியத்
துன்பஞ் சிறிதில்லை தொல்லுலகில்—அன்பின்றி
ஆண்டவனைத் தான்மறந்து ஆசை அழற்படுதல்
தூண்டிமீன் போலாந் துணி. 53

நல்லாருக் கெந்நாளும் நாயகனே உற்றதுணை
நல்லாரே நாயனுக்கு நல்லவராம் — உள்ளவரை
எத்தனைதான் துன்ப மெதிர்த்துநின்ற போதினிலும்
அத்தனையும் வெல்வா ரவர். 54

வல்லவனின் தொண்டர் வறுமையுற்ற போதினிலும்
உள்ளமகிழ் வோடிருப்பார் உண்மையிது—வல்லவனும்
மாந்தர் நிலையறிந்தே மாறாத நல்லருளைச்
சாந்தமுடன் யீவான் தக. 55

எல்லோரும் மானிடராய் இவ்வுலகி லேயிருந்தும்
எல்லோரும் மானிடராய் ஏனில்லை — உள்ளமதில்
வஞ்சகமும் பொய்சூதும் மானிலத்தில் மிக்கியற்றி
நஞ்சுவிளங் காவதனுல் நம்பு. 56

ஏழை பணக்காரர் யாவருமே யீசனின்முன்
நாளை ஒருநிலையே நண்ணிடுவோர் —சீலமிலார்
கூறுகின்ற பேதமெல்லாம் குப்பையிலே வீழ்ந்தெரியும்
ஏறுபடி கண்டறஞ்செய் தேர். 57

இன்று பணக்காரர் எட்டாம்நாள் ஏழையடா
வென்றி யடைந்தாரே தோல்விகண்டார் — நன்றுலகில்
மாற்றம் இதுபோல் வகையின்றி யேயிருக்கும்
சீற்றமின்றிச் சிந்தனைநீ செய். 58

நல்வழியிற் சென்றுல் நலன்காண்பீர் உண்மையிது
பல்வழியும் இன்பம் பயக்குமே—வல்வழக்குக்
கொண்டு கொடுமனத்தார் கோதார் வழிநடந்தால்
சோதிச் சுடர்காண்கு வீர். 59

சித்தாந்த வாழ்க்கை சிரமந் தரினும்
சிந்தாந்த வாழ்க்கை தினந்தினமும்—முத்திநிலை
காட்டுவித்துப் பேரின்பக் காவினிலே நன்நீருள்
ஆட்டுவிக்குங் கூறுமுறை ஆம். 60

வேதத்தை ஓத விளக்கம் பலகாண்பீர்
நாதத்தைக் காணும் நலனறிவீர் — நீதமுடன்
ஓதியே வேதத்தை உட்பொருளைக் கண்டறிந்தால்
சோதிச் சுடர்க்காண்கு வீர். 61

வேதாந்த வாழ்வு விளங்கிச் சுடருவதால்
வேதாந்தி யாக வியன்புவியீர்—நாதாந்தம்
போற்றிப் புதுவாழ்வு போற்றி இனிதிருப்பீர்
கூற்றுவர வஞ்சுமெனக் கூர். 62

நல்வழிகள் கோடி நலமாக உண்டென்பார்
நல்வழிகள் தேர்ந்து நடக்காதார்—நல்வழிகள்
ஈசன் நபிமூலம் ஏற்றுவித்த நன்மறைகள்
நேசவழி காட்டும் நினை. 63

மனிதர் மனிதப்பண் போடினிதே வாழ்ந்தால்
இனிதான வேதம் எதற்காம்—மனிதனே
காட்டு விலங்குகளாய்க் காலத்தில் மாறிதால்
நாட்டுவித்தான் வேதம் நனி. 64

வேதநிலை கண்டார் விவேக மடைவாரே
வேதநிலை காணும் விருப்பமுடன்—ஓதிநிதங்
கண்டறிந்து ஞானவழி கொண்டுயரக் கூறுகிறேன்
பண்டைவழி யாவும் பணிந்து. 65

நன்மைகளைச் செய்திடவே நற்குணங்கள் வேண்டுமறி
உண்மைநெறி நின்றால் உயர்ந்திடலாம்—உண்மையில்லா
அற்பராற் றீமை அவனிக்கு மிக்குண்டாற்
பொற்புநெறி பேணிடுவாய் போய். 66

அறங்களென நம்பி அநியாயந் தன்னை
மறைவிளங்காச் செய்தார் மனிதர்—கரங்குவித்து
வேண்டாமே தீநெறிகள் என்றினது வேண்டினரே
ஆண்டகையெம் மாநபிகள் அன்று. 67

பிறரறியத் தர்மம் பெரிதாகச் செய்வார்
பிறரறியச் செய்வதுநற் பேறோ—அறமனத்தீர்
காக்காசு நீர்பிறர்க்கு யீந்திடினும் தானடங்கி
ஆக்கமுடன் செய்வீர் அறம். 68

தீங்கியற்றி வாழ்தல் திருடர்க்குந் தீதாகும்
பாங்கறிந்து வாழ்வீர் பலிசாக—தீங்கரும்பின்
சாறதனை நீக்கிவெறுஞ் சக்கைதனைக் கொள்வதுவா
ஆறறிவு பெற்ற பயன். 69

நல்லவராய்ப் பேரெடுத்து நானிலத்தில் வாழவெனில்
பொல்லாத தீச்செயலின் போக்கறுமின்—வல்லவனும்
நல்லருளை யீந்தே நலமாஞ் சுவர்க்கமதை
உள்ளவரை யீவான் உவந்து. 70

வாழ்வதுவும் தாழ்வதுவும் மானிலத்தில் மாறிவரும்
ஆள்வரிது காணல் அறிவாகும்—பால்நிலவு
நாளும் பொழிமதியும் நன்றின்றித் தேயுவதால்
வாழுமுறை தேர்மின் மனத்து. 71

உடனுக் குடனொருவர்க் கொப்புடனே நன்மை
கடனாகச் செய்தல் கவினும்—படநாகம்
போற்சீறி வாழ்ந்தவரைப் போக்குவித்தால் நன்றில்லாத
தீப்பாலர் செய்கை தெரி. 72

பொறுத்துணர வேண்டும் புனிதமுளா ரன்பை
கருத்துணர்ந்து கற்பதுவே கல்வி—சிரத்தையுடன்
எச்செயலைச் செய்தாலும் ஏற்றமுட னுராய்ந்திங்
கச்சமின்றிச் செய்த லழகு. 73

நன்றி உணர்வுதனில் நானிலத்தில் நாய்போல
என்று மிருத்தல் இனிதாகும் —நன்றில்லா
யானைபோல் தீமை எவர்க்கும் இயற்றுவது
தீனை மறந்தார் செயல். 74

மறையைத் தினமோதி மார்க்கநெறி தன்னில்
முறையாய் நடந்துவந்தால் மோட்சம்—குறைவின்றிக்
கிட்டும் முறண்பாட்டாற் கிட்டும் பெருநரகம்
அட்டியின்றிக் காண்மின் அறிந்து. 75

வல்லவனின் நல்லருளை வாழ்க்கையிலே எய்திவிட்டால்
நல்லபலன் கூடும் நலமாக—உள்ளபடி
உண்மை அறியாதார் ஊக்கமுடன் பாவமதை
வன்மையுடன் செய்தழிவார் மண். 76

அன்பாக உன்னை அனுதினமுஞ் செந்தமிழின்
வெண்பாவிற் பாட விழைகின்றேன்—துன்பமதை
ஆண்டவனே நீக்கி அழகான நல்லின்பை
வேண்டுமட் டீவாய் விரும்பி. 77

என்மனத்தைத் தீயநெறி என்று மலைக்காமல்
நன்மனத்த ருயிருக்க நல்லருளை —இன்னினியே
தந்தாள்வாய் அன்புத் தமிழின் தலையவனே
நொந்தழவே வைக்காதே கார். 78

அறஞ்செய்திங் கெந்நாளும் அன்புடனே வாழ
வரந்தருவாய் தற்பரனே வாகாய்—புறஞ்சொல்லி
தீமை பெருக்குவதால் தேயாது பாவமெல்லாம்
சேமங் கெடுக்குமெனத் தேர். 79

நல்லறிவோ டென்றுமிந்த நானிலத்தில் நான்வாழ
உள்ளுயர்வு தந்தென்னை ஊக்குவிப்பாய்—கள்ளமிலார்
உள்ளமதில் வீற்றிருக்கும் உத்தமனே உன்னடியேன்
உள்ளுருகிப் பாடுகிறேன் ஓர். 80

என்பிழையை நீபொறுத்து ஏற்றம் இனிதளிப்பாய்
அன்பருளம் வாழும் அறிவுடையாய்—கண்ணிமைபோல்
என்னைநீ காவா திருப்பாயேல் உன்றனை நான்
நண்ணுவதிவ் வாழ்விலிலை யே. 81

என்னைப்போல் மாந்தர் இருக்கின்றார் மாகோடி
கண்ணைப்போற் காத்தே வருகின்றாய்— அன்னவரை
உன்னருகில் நானிருந்து ஒய்யார மாய்வாழ
நண்ணியருள் செய்வாய் நனி. 82

இந்தச் சடலமுடன் எத்தனைநாள் வீற்றிருப்பேன்
இந்தச் சடலம் எதுவரையோ—எந்தையே
கூடழியு முன்னென்னைக் கூட்டிக்கொள் உன்றனிடம்
நாடிநான் கேட்பதுவாம் நல்கு. 83

மானிடரை மானிடர்கள் மாண்பற்றுத் தான்வதைப்பார்
ஏனிவரை நீபடைத்தாய் இவ்வுலகில்—மானிடராய்
வந்திங்கு சண்டைசெயும் வம்பரைநீ துன்பூட்டி
நொந்தழச்செய் நூறுதர மே. 84

எல்லாம் படைத்திங் கிறுதியிலே மானிடரை
சொல்லிப் படைத்தானே சோதியிறை—உள்ளுவந்து
நம்மைப் படைத்தானை நாயகனை நாளும்
செம்மையுடன் சேர்ந்துபணி வோம். 85

நம்பிக்கை ஒன்றே நலமருளும் எவ்வழியும்
நம்பிக்கை இன்றேல் நலமாகா—தம்பிநீ
நம்பிக்கை யோடெதையும் நாடிச்செய் வெற்றியது
நம்பிக்கை யோடு வரும். 86

நம்பி உறங்கிவிட்டால் நற்செயலில் வெற்றியுண்டோ?
நம்பிச் செயல்படுத்து நன்றாக—தெம்புடனே
செய்தே பலதொழிலும் சேமம் பெருக்கிடுவாய்
எய்தற் கிதுவே நெறி. 87

சட்டப் படி நடக்கத் தண்டனைகள் வந்திடுமோ?
சட்டத்தை வெட்டித் தகர்ப்பதனால்—மட்டிகளே
எல்லாமும் வந்திங் கிடும்பை தருவதனால்
பொல்லாங்கு நீக்குவீர் போந்து. 88

ஆசைவழிப் பட்டே யறிவிழந்து சாகாமல்
பூசைவழி நிற்றல் புனிதமடா—ஆசையது
பொல்லாங்கு செய்யும் புகழைக் கெடுத்துவிடும்
நல்லாங்கிற் கிஃதை நடத்து. 89

தொழுது பலனடைந்தார் தொல்லுலகிற் கோடி
அழுதிங் கலைந்தோ ரனேகம்—உலகினிலே
கோடிதனிற் கோடியடா கோடானு கோடியடா
நாடியது கண்டே நட. 90

ஓய்வு கிடைத்திட்டால் உத்தமஞ்சேர் நன்னூலை
ஆய்வுடனே ஓதல் அறிவாகும்—பாய்விரித்துத்
தூங்கி விழித்தல் திரைப்படங்கள் பார்த்திடுதல்
வீங்கும் பயனென் றிலே. 91

கட்சிபல பேசியுயர் காலங் கடத்துவதால்
நிச்சயமாய் வாழ்வு நிலைகுலையும்—பட்சமுடன்
நல்லறிவை நாளும் நலமுறவே தான்வளர்க்கும்
நல்லறிவு நூலோது நன்கு. 92

உருவில் ஒருபடித்தாய் உள்ளனரே மாந்தர்
திருவார் உளமதனைத் தேற – அறைகுறையாய்
வேற்றுமைகள் மிக்கு விரிந்திருத்தல் கண்டினிது
ஆற்றலுளார் போற்றல் அறி. 93

தத்துவங்கள் யாவும் தழைத்தோங்க வேண்டுமெனில்
பத்திநெறி எங்கும் பரப்புகவே—பத்திநெறி
தீமை அகற்றும் திருவளர்க்கும் ஆதலினால்
காமந் தணித்ததனைக் கார். 94

யீசன் இருக்குமிடம் இன்பார் இருதயமே
பாசமுடன் அவ்விடத்தைப் பாரப்பா—தோசம்
நெருங்காது நல்ல நெறிகாண்பாய் வாழ்வு
சுருங்காது என்றுந் தொழு. 95

நல்லோர் சரித்திரங்கள் நாளும் இனிதறிந்து
நல்லோர் வழிநடந்து நன்றடைவாய்—எல்லோரும்
வாழ்த்துவார் உன்னை மதித்துப் புகழ்ந்திடுவார்
பாழ்த்தநெறி நீக்கல் பயன். 96

வீரமுடன் நற்செயல்கள் மேவித் தொடர்ந்துசெய
சாரமுடன் உன்னைச் சரித்திரத்தில்—பாரறிய
மிக்கெழுதி வைத்து விரும்பிப் புகழ்ந்திடுவார்
தக்கபணி மிக்கபுரி வாய். 97

புண்ணியங்கள் செய்தால் புகழ்பெருகும் எக்காலும்
கண்ணியங்கள் வீறுங் கணக்குடனே—உன்னியிதை
கண்டு கடைப்பிடித்துக் காட்சி பலமெறுதல்
மண்டலத்தோர்க் கேற்ற மதி. 98

குழவி மொழிகேட்கக் குன்றனைய இன்பம்
தழுவி நமைநெருங்கும் தாவி—மழலையாரோ
டாடி இனிதிருக்க வற்புதங்கள் தோன்றுமடா
நாடி மிகப்பெறலே நன்று. 99

குழந்தை விளையாட்டைக் கூர்ந்து கவனிப்பின்
எழுந்தோடு முன்கவலை எங்கோ—பழந்தேனும்
சேர்ந்தாலும் பிள்ளைமொழிக் கீடோ செகத்தினிலே
தேர்ந்தபே ரின்பமதாஞ் செப்பு. 100

பெரியோ ருடன்கூடிப் பேசிப் பழக
அறிவோ டொழுக்க மமையும்—உரிமையுடன்
நல்லோரைத் தேடி நடைபழகு நாளுளும்
வல்லோனைச் சேர்க்கும் வழி. 101

போலிச் செயலாலே போற்றுகிறார் மானிடரைப்
போலிச் செயலாலே புண்ணியமோ—காலிகளாய்
மண்ணி லலையாமல் மாண்பார் பணிபுரிந்து
கண்ணியமாய் வாழ்தல் கடன். 102

அறிவின் திறத்தாலே ஆள்வாய் உலகை
அறிவின் திறனே திறனும்—திருவுலகில்
யீதின்றி வேறெதனால் இல்வுலகில் ஏற்றமுண்டு
ஓதி உயரறிவைக் கொள். 103

அறஞ்செய்வார் தம்மை அவனியே வாழ்த்தும்
மறஞ்செய்வார் தம்மை மறக்கும்—திறமறிந்து
நல்லிசைகள் சேர்க்க நலமியற்று அல்லாக்கால்
வல்வசையே தேடி வரும். 104

புலவர் கருத்தின் பொருளை அறியார்
அலகையே யாவார் அறிந்து—சிலபொழுதும்
கற்ற புலவருரை கேட்டு கருத்துயர்வு
பெற்றும் பெருமைதனைக் கொள். 105

வெள்ளை மனத்தினர்க்கு வேதனைகள் இல்லையடா
துள்ளும் மனத்தினர்க்குத் துன்பமிகும்—தொல்லையது
நீங்கி நிலைத்த நெடும்புகழை எய்திடவே
ஆக்குவாய் தூய அறம். 106

வெள்ளை உளத்தார்க்கு மேவுங் கலைபலவும்
கள்ள உளத்தாரைக் காணவே—பல்கலையும்
ஓடி ஒழிந்துவிடும் உத்தமனாய் வாழ்ந்துயர
நாடிவளர் நன்மனத்தை நன்கு. 107

படித்தபடி வாழப் பயனடைவீர் மிக்கு
படித்தபடி வாழார் பயனைத்—தடித்தனமாய்ப்
போக்குவா ராதலினாற் புத்தியுள்ள நன்மகனே
ஆக்குவாய் நன்மைதனை யாங்கு. 108

பிள்ளைக்குப் பைந்தமிழை பேணி இனிதுரைக்கத்
தொல்லையற்று வாழ்வான் துரிதமுடன்—இல்லையெனில்
எத்தனைதான் செல்வம் இருந்திட்ட போதினிலும்
நத்திவருங் கேடே நனி. 109

தேடியநற் செல்வமதைத் தீயவழிக் காக்காமல்
நாடியறஞ் செய்தல் நலமாகும்—பீடுபெற
யீதின்றி நல்ல இனியவழி வேறில்லை
தீதின்றி வாழத் தெரி. 110

பெண்ணே சதமென்று பேயாய் அலையாமல்
பின்னே யுறுபலனைப் பேணப்பா—கண்ணியமாய்
இல்லாள் ஒருத்தியுடன் இன்புற்று நம்மிறைவன்
நல்லடியைப் போற்றுவதே நன்று. 111

எல்லா மவன்செயலென் றெண்ணி யிருப்பார்க்குப்
பொல்லாங்கு சூழாது போற்றியறி—வல்லானை
ஏத்தித் தினம்பணிய எல்லாமுங் கைகூடும்
சாத்திரத்தின் தண்நெறியைச் சார். 112

வந்த விருந்தினரை வாழ்த்தி வரவேற்கச்
சிந்தை குளிர்ந்துவிடுஞ் சீராக—பந்தம்
உறவாலே மிக்காய் உயரும் அதுவால்
மறவாமல் வந்தவரை வாழ்த்து. 113

பற்றுவைத்து யீசனடி பற்றிவிடு சொல்லரிய
பற்றதனுல் வாழ்வுப் பயன்பெருகும்—உற்றவனும்
அன்புடையோ ரில்லத்தில் ஆசையுட னேயிருந்து
பண்பை வளர்ப்பான் பரிந்து. 114

நற்செயல்கள் செய்பவரை நாடிக் கெடுக்காமல்
நற்செயல்கள் நீசெய்ய நாடப்பா—இச்செயலால்
நல்ல பயன்பெருகி நாளும் பெருவாழ்வு
உள்ளபடி கூடுமென வோர். 115

பெருத்த நிதியுடையார் பேராசை கொள்ள
வருத்தம் பலவந்து வாட்டும்—கருத்துணர்ந்து
உள்ளதைக்கொண் டென்றும் உவந்தின்பஞ் சேர்க்குவதே
இல்லறத்தார் தங்கள் இயல். 116

வாசனைகள் பூசி வழியில் நடந்துவர
ஆசையுடன் பார்ப்பா ரனைவருமே—ஈசனையும்
அந்நிலையி லேவேண்டி ஆசையுட னேதொழுகப்
புண்ணியமே கூடும் புவிக்கு. 117

எண்ணத்திற் ருழ்ந்தே இருக்கின்ற மானிடரை
எண்ணத்தாற் ருழ்வுக் கிடம்வைத்தால்—திண்ணமதாய்
பண்பழிந்து போகும் பலபே ரிகழ்ந்திடுவார்
நண்பிணைந்து நாளும் நட. 118

காட்டு விலங்காகக் காலமெலா மேமாந்தர்
நாட்டில் வசிக்கின்ருர் நன்றின்றி—பூட்டுடைப்பார்
தீவைப்பார் கற்பழிப்பார் தேவடியாள் கால்பிடிப்பார்
தேவை இகழ்ந்திடுவார் தேர். 119

மானம் பெரிதன்ருே வையத்து மானிடரே
தானம் பெரிதன்ருே தாரணியில்—ஏனிதனைத்
தேரா திருந்து தீமைவலஞ் சேர்க்கின்றீர்
பேரப் பெரும்பழியாம் பின். 120

புத்தி வளர்ந்திடவே பேராசை கொண்டிடலாம்
பத்தி வளர்ந்திடவே பக்குவமாய்—இத்தரையில்
நற்ருெழுகை செய்திடலாம் நன்றில்லா ஆசையெலாம்
மட்குடத்தே கல்லெறிந்த வாறு. 121

பாடுங் கவிதையெலாம் பக்தியுட ஞேதிவர
நாடும் புகழ்ந்துன்னை நல்வரவு—பாடிவரும்
நல்லோ னருளீவான் நாட்ட முடன் நீயறிந்து
உள்ளுவந்து பாட்டியற்ற வுன். 122

பேரின்பம் எய்தப் பெருமுயற்சி செய்திடுவீர்
வேறின்பம் இங்கு வியர்த்தமதாம்—பேரின்பம்
யீசனடி பற்றி இருந்திட்ட போதுவரும்
நேசமுடன் நெஞ்சிறைக்கே வை. 123

பக்தரெனச் சொல்லிப் பகல்வேடம் போடாதீர்
சக்திகுன்றிப் போகும் தருணத்தில்—முக்திபெற
போலிச் செயலாற் பெரும்பயனில் பூவுலகீர்
சீலவறஞ் செய்வீர் தினம். 124

அடுத்து முயற்சிசெய ஆகுமே எல்லாம்
எடுத்த முயற்சியிலே யீசன்—அடுத்துதவி
செய்திடுவான் நல்ல சிறப்பும் பொருளருளும்
உய்திடவே நன்கிதனை யோர். 125

ஆதிமனு ஆதமிடம் அன்பில்லாச் சைத்தானும்
நீதிமனு தீக்க நெருங்கினற்போல்—மேதினியில்
நீதி பிறழ்ந்தால் நிலைகுலையும் துன்புவரும்
ஆதலினல் தீமைவிடு மின். 126

நன்மைபல செய்ய நயந்து விரும்பிடுவீர்
உண்மைநபி கூற்றை உலாங்கவே—இம்மையிலே
தீமை களைந்து திருவாழ்வு பெற்றுயர
சேமமிது வாமுணர்மின் தேர்ந்து. 127

பள்ளிப் பருவமதிற் பைங்கலையுங் கற்றுயர்வீர்
பள்ளி நிலைகடக்கப் பக்குவங்கள்—உள்ளியெதுங்
கூடாதே யுன்னைக் குடிகெடுக்க வைத்துவிடும்
ஓடாது கற்பீர் உவந்து. 128

சந்தேகம் தன்மனைவி மீதுகொளல் இல்லறத்தைச்
சந்தி சிரிக்கவைக்குந் தானறிவீர்—இந்தநிலை
என்றைக்குந் தீதே இனியேனும் தன்கிழத்தி
குன்றுநிலை செய்யாதீர் கூறி. 129

உழைத்துப் பொருள்சேர்த்திங் குன்னதமாய் வாழல்
பிழைக்கும் வழிதேர்ந்தோர் பெட்பாம்—உழைக்காமல்
சோம்பேறி யாய்எங்கும் சுற்றித் திரிபவர்க்கு
தீம்புபெரி தாகவருந் தேர். 130

ஞாயமது சொல்வோர் நடுநிலையிற் பேசாமல்
ஞாயமது கூறல் நலமாமோ—சாயுநிலை
உள்ளவர்கள் நீதிபதி யாயிருந்தாற் பாவிகள்தான்
நல்லவராய் வீற்றிருப்பார் நண். 131

பேயில்லை என்றிங்கு பேசலா மானலும்
பேயுண்டு காணப்பெரிதுமே—தூயபெரும்
நல்லவர் மாண்டக்கால் நாடுமுயர் தேவரடா
புல்லர்மாண் டாலவர்கள் பேய். 132

வீரனுடன் கோழை விளையாடல் நன்மையிலை
வீரனுடன் வீரன் விளையாடல்—தீரமது
மிக்க நிறைந்திருக்கு மேயிந்தச் சண்டையிலே
தக்கமுறை தானறிந்து சார். 133

கொஞ்சி விளையாடும் கொவ்வையிதழ்க் கன்னியரே
வஞ்சகரைக் காதல்கொண் டாடாதீர்—நஞ்சிருக்கும்
பாம்பு படம்விரிக்கப் பார்க்க அழகாகும்
நாம்பிரிவோம் பற்படிந்தக் கால். 134

செல்வம் பலவும் திரட்டினே மென்பீரே
செல்வம் அவனன்றிச் சேருமோ?—நல்வழியை
நாடி இறைதொழுமின் நான்பெரிய னென்றுதிமிர்ப்
பீடுரைக்கும் பேய்மைவிட்டுப் பேண். 135

குருவைப் பணிந்து குணமாகப் பேணத்
திருவுயருங் கல்விநலந் தேர்வீர்—சிறியோரே
ஆரம்ப நன்மை அறவே புரியாமல்
தீரம்பே சாதீர் தினம். 136

ஓதுவீர் கல்வி உயர்வு மிகவுளதால்
ஓதுமுறை விட்டால் உயர்வில்லை—மேதினியில்
கற்றுர் நலமடைவார் கல்லாதா ரேதடைவார்
சொற்றுர் முறையைத் தொடர். 137

ஒற்றுமையாய் வாழ உலகஞ் செழிப்புறுமே
ஒற்றுமையாய் வாழ உணருங்கள்—ஒற்றுமையே
பேதம் அகற்றிப் பெருவாழ்வு நன்றியற்றும்
ஓதக்கேள் உண்மை உரை. 138

பிள்ளைபல பெற்றுவிட்டால் போதுமோ? போதாது
நல்லபடி யாய்வளர்த்தல் நற்கடமை—இல்லையெனில்
பிள்ளை எமனுகிப் பேதம் மிகத்தருமாற்
கள்ளமின்றிப் பிள்ளையைக்காப் பீர். 139

தக்க வயதுவரைச் சங்கையின்றிச் சோதரர்கள்
பக்குவமா தாய்ப்பரிந்து பாங்குபெற—எக்கணமும்
நல்லவுயர் ஒற்றுமையும் நல்லன்புங் கொண்டினிது
சொல்லருமை யாய்வாழ்தல் சீர். 140

பிள்ளை வளரும்போ தேகொடிய பேச்சுகளைச்
சொல்லிப் பழகிவரச் செய்ததினுல்—பிள்ளைகளும்
அவ்வுரையே மேலென்று ஆசையுட னேபேசிச்
செவ்விதனை விட்டகன்றுர் தேர். 141

கல்லைக் கடவுளெனக் காட்டியதன் தன்மையினால்
நல்ல அரபியர்முன் நண்பிழந்தார்—பிள்ளைகளும்
வேண்டித் தொழுது விளங்காக் குபிரடைந்து
மாண்டசெயல் விட்டார் மதி. 142

நாயகந்தான் சொன்ன நலமான வார்த்தைகளைத்
தாயகத்தி லுள்ளோர் சகலருமே—ஞாயமுடன்
வாழ்க்கைதனிற் கொண்டு வளர்ந்திடவே எக்காலும்
வாழ்க்கையெலாம் பொன்னும் வளம். 143

மூத்தோர்சொல் வார்த்தை முறைமை முழுதறிந்து
காத்தோம்பி வாழல் கடனாகும்—ஆத்திரமாய்
மூத்தோரை ஏசி முறைதவறித் தானடத்தல்
தீத்திறத்திற் சேர்க்குமெனத் தேர். 144

நல்லதொடு கெட்டதென நானிலத்திற் செய்கைரெண்டு
நல்லதொன்றைத் தேடல் நலமாகும்—இன்றேற்
கெடுதி வளர்ந்திங்கு கீழ்மைப் படுத்தும்
சுடுதியிது வென்னத் தெளி. 145

சோற்றாலே மாந்தர் சுகமடைவ தல்லாமல்
காற்றாலே மாந்தர் களிப்பதில்லை—ஏற்றம்
இறைவனின் சக்தியதால் என்றுமே பெற்று
முறையொடு வாழ்கிறோம் முன். 146

பாங்கறிந்து இல்லறத்தைப் பண்புறவே செய்யாமல்
வீங்கப் பொருள்புதைப்போர் வீணரே—தாங்குமுயிர்
ஓடியதும் காசதனை ஊரார் எடுத்தழிப்பார்
நாடியிதை ஆய்ந்தே நட. 147

அறம்பேசல் நன்றே அனைத்தும் வெறுக்கப்
புறம்பேசல் தீதே புவியில்—உரமாக
நல்லுணவை யுண்டு நலமாகத் தூங்குவது
தொல்லையற்ற தென்றே தொழு. 148

இணைந்திருவர் வாழ இறைவனுக்கு நன்மை
சினந்திருவர் வாழ்வதுவே தீமை—வினையாகிச்
சண்டையென்ற பேச்சே தலைதூக்கி ஓடிவரும்
கண்டுணர்ந்து காக்கையென வாழ். 149

கடன்வாங்கி நல்வீடு கட்டுவது நன்றோ ?
கடனோ கணக்கில்லாத் தொல்லை—திடனாகத்
தந்து வருத்தும் தகைமை தெரிந்திருந்தும்
எந்தவிதம் ஏற்றீர் இதை ? 150

வறுமைதனிற் செம்மை மதிப்பை மிகுத்துப்
பெருமைப் படுத்துகின்ற பேற்றை—உரிமையுடன்
சேர்ந்து தொடர்வறுமை செய்துன்பம் நீபொறுத்து
வாழ்ந்து வருவீர் மகிழ்ந்து. 151

முன்னோர் திருவழியை முற்றாகப் பேணிடுதல்
பின்னோர் பெருங்கடனாம் பேருலகில்—கண்ணாக
நல்ல மறையோதி நல்லொழுங்கு ஓம்பிரை
விள்ளரிய நன்மையுண்டாம் மேல். 152

வஞ்சகத்தை நீக்கி வளமாக வாழுமுறை
அஞ்சலின்றிக் கொள்வீர் அனுதினமும்—பிஞ்சினிலே
நல்வழியைப் பேணி நடத்திரை என்றென்றும்
பல்வழியும் மேலாம் பகர். 153

பானை உடைந்தாற்பின் பண்பார் வறையோடாம்
காணும் உடலுடைந்தால் என்னாகும்?—வீணிலே
மண்ணுக் கிறையாவ தன்றி வறுப்பதற்கு
நண்ணுமோ தேர்வாய் நனி. 154

ஆலிமெனப் பட்டம் அருமையாய்ப் பெற்றாலும்
ஆலிம் நிலையடைய மாட்டாரே—நாழிகையில்
கற்றதனைக் கொண்டு கணக்காகத் தீவினைகள்
விட்டாலே ஆலிமென வாழ்த்து. 155

சீனியென ஏட்டிற் சிறப்பாய் எழுதிவிட்டாற்
சீனியது வாகிடுமோ ? தேருங்கால்—சீனியதை
ஏற்றுண்டாலன்றோ இனிப்பை யறிந்திடலாம்
ஏற்றுநட மூதுரையை இங்கு. 156

உண்மை வழிகாட்டி உத்தமராய் இவ்வுலகில்
நன்மைபல செய்தார் நபிமார்கள்—கன்மனத்தார்
துன்பம் படுத்திடினும் துன்பியற்ற எண்ணாமல்
அன்புப் பணிசெய்தா ராம். 157

தன்னை மதித்துத் தருக்கித் திருப்போர்க்கு
மண்ணுலகில் என்றும் மதிப்பில்லை—தன்னிலையை
மற்ருேர் மதிக்கும் மதிப்பே மதிப்பாகும்
அற்றதெல்லாம் ஆடம் பரம். 158

நல்ல பழக்கத்தால் நாளுளும் இன்புண்டு
பொல்லாப் பழக்கத்தால் பேசரிய—பொல்லாங்கு
வந்து கொடுமிடும்பாய் வாட்டும் இதனுலே
சந்ததமும் நல்வழியைச் சார். 159

பற்றுடனே வாழப் பலனுண்டு பூவுலகில்
பற்றற்று வாழல் பயனில்லை—உற்றிறையைத்
தேட்டமுடன் எண்ணித் திருவருளை நாடுவது
ஈட்டவிசை யாவுந் தரும். 160

காசுபொருள் தேடக் கடல்கடந்து சென்றங்கு
வாசுகெட்டு வாழ்ந்து வருகின்றீர்—தேசுபெற
வல்லவனைத் தேடி வணங்குவதல் லாற்பிறிதில்
எள்ளளவும் நன்மை இலை. 161

ஈகைச் செயலென்றும் ஈசனவன் நல்லருளை
வாகைச் செயற்கு வழிப்படுத்தும்—சாகையிலும்
நல்லவனென் றும்மை நகரத்தார் வாழ்த்திடுவார்
வல்லவனு மப்படியாம் வாழ். 162

சங்கடங்க ளுன்றனையே சாய்க்க வரும்போது
பொங்குமுயர் நல்லிறையைப் போற்றிசெய்தால்—மங்களமாய்
தேடிவரும் நந்நலங்கள் தேய்ந்துவிடுஞ் சங்கடங்கள்
நாடியிதை நன்ருய்த் தெளி. 163

புன்முறுவல் பூத்துப் புகழாழி தற்பரனை
நன்மனத்தோ டேநாட நன்மையுண்டு—உண்மையிறை
காரணனுய் வந்து கருத்தறிந்து நல்வாழ்வை
தோரணமாய் செய்வான் தொடு. 164

தோற்றத்தில் மானிடராய்த் தோன்றி இருந்தாலும்
சாற்றுமுயர் நற்குருவை சாலாக்கால் ஏற்றமுறு
மானிடரா வாரோ மகிலத்தில் வந்தவர்கள்
பேணியறி வீரிதனின் பெட்டு. 165

பழக்கத்தா லன்றே பயனடைவார் மாந்தர்
பழக்கம் முரணப் பழியாம்—வழக்கறிந்து
வாழ்மின் புவியீர் மனிதருள் தெய்வமாய்
சூழ்மின் இனிய தொடர்ந்து. 166

தன்னூரை நம்பித் தரிகெட் டலையாதே
தன்னூரை நம்பியவர் தக்கவரோ?—மண்ணூரில்
உள்ளோர் மதித்திடவே ஓங்குபுகழ் வாழூரை
உள்ளார்ந்து நாடிங் குவந்து. 167

தனக்குப் பெரியவனைத் தானறிந்து கொண்டு
மணக்கவே வாழ்ந்துயர்வீர் மாண்பீர்—கணக்கறியார்
இந்தப் புவிப்பிறந்து என்னபய னைக்கண்டார்
கந்தமற்ற பூவாங் கணி. 168

காட்டு மிருகமதைக் கற்பித்து நம்பிடினும்
வீட்டு மிருகமதை வேண்டாதே—நாட்டினிலே
பெண்ணை நம்பி வாழ்ந்து பெருமையுற்றார் யாவர்காண் ?
விண்ணவனை நம்புவதே மேல். 169

பெட்டைகளின் வஞ்சத்தைப் பேணி உணராதார்
மட்டிகளாய் வாழ்வாரிம் மானிலத்தில்—மட்டைகளைக்
கற்றறிந்தார் நம்புவரோ ? கைகழுவிப் பேரிறைவன்
பற்றினிலே நிற்பார் பயந்து. 170

புத்தியுடன் வாழப் புகழுண்டிங் கெக்காலும்
புத்தியுடன் வாழ்ந்து புகழ்பெறுவீர்—சித்தரெலாம்
புத்தியுடன் வாழ்ந்தே புகழ்பெற்றார் ஆதலினால்
நத்திமிகப் புத்திபெறு வீர். 171

மற்றோர் குறைகண்டு மன்னித்தே அந்நவரை
உற்றோராய் பேணி உவந்திருப்பாய்—கற்றறியா
மாந்தரிங்கு செய்யும் மதிகெட்ட செய்கைகளைச்
சாந்தமுட னேபொறுப்பீர் தான். 172

எத்தனைதான் துன்பம் எடுத்தேறி வந்தாலும்
அத்தனையும் ஏற்பான் அறிவாளன்—புத்தியிலான்
ஆயாச மாகி அறிவிழந்து எந்நாளும்
ஓயாமற் சோர்வா னுறங்கி. 173

கற்றுரைக் கண்டு கனன்று வெறுக்காமல்
உற்றார்போற் பேணி உவந்திருந்தால்—கொற்றவனும்
நல்லருளை யீந்து நலம்புரிவான் கற்றோர்க்குத்
தொல்லைதர எண்ணாதே தோய். 174

புன்மொழியால் வீணே புரியாமற் கற்றோரைக்
கண்கலங்க வாட்டாதே காவலனே—என்பெறினும்
கற்றார் உனக்கடங்கிக் கைகட்டி நிற்காரே
முற்றாக நீயறிந்து கொள். 175

காசுபணம் பெற்றுக் களிப்போ டிருந்தாலும்
வேசைதனிற் சேர விழையாதே – வேசையவள்
காசைப் பறித்துனக்குக் காசத்தை மிக்களிப்பாள்
தோசிதனை நீக்கித் தொழு. 176

ஏழைகளின் காசதனை ஏப்பமிட எண்ணாதே
மூளைகெட்டுப் போவாய் முடிவதனில்—ஏழையவர்
கண்ணீர் வடித்தால் கருவற்றுப் போய்விடுமே
தண்ணீருங் கிட்டா தறி. 177

பசிக்குதென வந்தோரைப் பாரா திருப்போன்
நசித்துக் கெடுவானே நாளில்—விசைத்திறைவன்
தண்டனைகள் தந்து தரங்கெடவே செய்திடுவான்
அண்டியவர்க் கன்ன மளி. 178

பேசி அருகிருந்து பேதைகட்கு அன்னமிட்டால்
வாசி கிடைத்து வளம்பெறுவாய்—தோசியெனும்
பொல்லார் களைக்கூட்டிப் போற்றி உணவளிக்க
நல்லபய னுண்டோ நவில். 179

முஸ்லிம்யாம் என்றே முறைபேசி வந்தக்கால்
முஸ்லிம்மா வாரோ முழுமையும்—இஸ்லாத்தின்
தத்துவத்தின் நல்வழியிற் றுனடக்கா னாயினவன்
உத்தமத்தீ னாகா னுணர். 180

நல்ல முகத்தோடு நாயகியைத் தானண்ட
உள்ள கவலையெலாம் ஓடிவிடும் – தொல்லுலகின்
இன்பமென்ப தெல்லாம் இதுவொன்றே என்றறிந்து
அன்புடனே வாழ்வீ ரணைத்து. 181

இல்லாள் குணமறிந்திங் கேற்றமுட னேகாக்க
இல்லாத இன்பமொன் றில்லையே—இல்லாட்கு
நன்மை புரியாத நன்றில்லா ஆண்மகனுற்
புன்மை குடியே புகும். 182

மனையற்ற வாழ்க்கை மதிப்பில்லை காணும்
வினையற்று வாழ்ந்திடவே வேண்டும்—மனையற்றுக்
கேவலமாய் வாழ்தல் கெடுதி மிகத்தருமால்
ஆவதறிந் தன்புடனே வாழ். 183

சந்தேகப் பட்டுத் தவறெதுவுஞ் செய்யாதே
சந்தேகத் துள்நலங்கள் சாராதே—சிந்தனையிற்
கண்டதையுங் காணு ததையுங் கணித்தறிந்து
பண்டிதராய் வாழப் பணி. 184

இன்சொல்லால் யாரும் இறும்பூது தானடைவார்
வன்சொல்லால் யாரும் மனம்நோவார்—வன்சொல்லை
நீக்கித் திருச்சொல்லை நீபேசி யாவருக்கும்
ஆக்குவாய் இன்பம் அறிந்து. 185

நல்லுளத்தா லுன்னை நலமாகத் தேடடவே
நல்லவழி யாதோ நயந்தளிப்பாய்—விள்ளரிய
வல்லமைசேர் நாயகனே வாட்டந் தவிர்த்தெமக்கு
நல்லருளை யீந்துநலந் தா. 186

உண்மையாய் இந்த உலகமதில் வாழ்குவமேல்
உண்மையாய் நாயன் உவந்திடுவான்—செம்மையுடன்
பேரின்பம் நல்கிப் பெருமையுறச் செய்திடுவான்
சீருளத்தோ டிங்கே தொழு. 187

நல்ல நபிமாரின் நல்லுளத்தில் நாயனவன்
கள்ளமின்றி வீற்றிருப்பான் காண்மின்கள்—உள்ளபடி
வேதம் நமக்குரைக்க வேண்டுங் கருப்பொருளை
நாதனே யீந்தான் நனி. 188

வல்லவனை மிக்க வறுமையினும் நாடிவர
சொல்லரிய இன்பநிலை தோன்றுமே—உள்ளவரை
நாயனின்றி மாந்தருக்கு நல்லதுணை யாருண்டு ?
தூயஉளங் கண்டுதொழு வோம். 189

மாலையிட்டுப் பார்க்க மதிப்பாகும் பிள்ளைக்கே
ஊளையிட்டுப் பார்க்க உதவாதே—வேலையிலும்
ஒன்றாகச் சேர்ந்திங் குவப்புடனே வாழ்ந்துவர
செண்டாக வீசும் சிறப்பு. 190

இணைந்தொன்றாய் வாழ்ந்தாலே இல்லறமு மோங்கும்
துணையின்றி வாழ்வோர் துறவோர்—வினை நீங்கிப்
பேரின்ப வீடு பெறவிரண்டு மார்க்கத்தும்
தேரின்ப முண்டறிந்து சேர். 191

கட்டிட்டால் காமம் கடந்தேறி ஓடிவிடும்
சட்டத்தைக் காக்கச் சரகாகும்—திட்டமுடன்
ஊரார்கள் பார்க்க ஒழுங்குடனே நன்மனையைப்
பேராகச் செய்துகுடி பேண். 192

தன்கொழுநன் மாழத் தனக்கெனவோர் நல்லவனைப்
பின்பற்றி வாழப் பிசகில்லை பெண்மக்கள்
கற்புப் பிழையாது காக்க இதுமுறையாம்
அற்பமென எண்ணல் அவம். 193

கொண்ட கணவன் குறிப்புடனே தானிருக்கக்
கண்டவனோ டோடல் கடும்பிசகாம்—பெண்டுகளே
நல்லொழுக்கம் யீதில்லை நற்கணவன் தன்னோடு
புல்லுதலே இல்லறத்தின் போக்கு. 194

எம்மதமுஞ் சம்மதமாய் ஏற்றுப் புவிவாழ்தல்
செம்மைபெறும் நல்வழியில் சேர்க்குமே—வெம்மையுடன்
பேதம் சமயத்திற் பேணி நடந்துவரின்
போதம் அயர்ந்துவிடும் போய். 195

நல்ல திருமணத்தை நாடி இனிதியற்றக்
கள்ளமின்றி ஆண்பெண் கருத்துடன்பா—டுள்ளநிலை
கண்டபின்னே செய்தல் கடனாகும் இல்லையெனில்
சண்டையே வாழ்க்கைத் தடம். 196

விருப்பமில்லா நன்மணத்தால் வேண சிறப்பிங்
குருப்படியாய் உண்டோ உரைக்க—தெருப்புழுதி
போன்று குடும்பம் புகழற்று மாய்ந்துவிடும்
தூண்டாதீர் வேண்டா மணம். 197

வேதத்தை நாடி விரும்பித் தினமோதிப்
பேதத்தை நீக்கிப் பெருமையுறல்—காதத்தில்
என்றும் மகிழ்வுதரும் ஏற்றமிகு செய்கையென
நன்றுரைத்தார் முன்னோர் நனி. 198

ஆண்டவனே தந்த அருமைத் திருமறையை
வேண்டுவதால் நன்மை விளையுமே—தாண்டிநின்றால்
தீமை விளையுவது திண்ணமா மாதலினாற்
சேம முறுவழியைச் சேர். 199

நீதி தவறியதால் நேர்மைதிக ழாண்டவனும்
ஓத மறைநமக்கு ஒப்புவித்தான்—போதமுள
மாநபியும் நம்மவற்கு மாண்புடனே சொல்லியுளார்
தானறிந்தால் நன்மையுண்டு சார். 200

நோய்மையுளார் நன்மருந்து நோக்கி அருந்துதல்போல்
வாய்மைநிலை கெட்டோரும் வாய்ப்புடனே-சேய்மைசென்றும்
வேதமெனும் நன்மருந்தை வேண்டுமள வுண்டுவரப்
போதநிலை வீறும் புகழ். 201

முன்புள்ள ஞானிகளை முற்றும் அறிந்தாலும்
அன்புள்ள மில்லார்க் கருளில்லை—பண்பதுதான்
இல்லார்க் கிசையில்லா வாறதுபோ லன்பில்லார்க்
கெல்லாம் முறணுகும் எண். 202

ஒருவனுக்கு மேலாம் உழுதுபயிர் செய்யும்
பெருமையுள மண்ணும் பெருகத்—திருவாளன்
பங்குகளாய் ஆக்கிப் பயிர்செய்வா ரக்கதைபோல்
இங்குளோ ரைப்பிரிப்ப தாம். 203

சாதிவகை பேசி சமூகங் கெடுக்காமல்
ஓதுமுறை தேர்ந்திங் குயர்வடைவீர்—சோதியிறை
பாதம் பணிந்து பகுத்தறிவை முன்னிருத்திப்
பேதமின்றி வாழ்மின் பெரிது. 204

புத்தியுளா ரென்றும் பெருமையுட னேயடங்கி
எத்ததியும் வாழ்வார் இனிமைபெறப்—புத்தியிலார்
நானே பெரியனென்று நாப்பறைகள் தான்சாற்றி
வீணே கெடுவான் விளம்பு. 205

பலது மறிந்தாலும் பாரிலிறை ஒன்றே
உளதென் றுணராதார் ஓரார்—சிலபோதும்
ஒன்றை நினைத்தே உருகி வழிபடார்
நன்றை அடையார் நகை. 206

நல்லறிவு கொண்டு நலமே உணர்ந்தோத
உள்ளதெலாங் காண்பா ருலகமதில்—அல்லாமல்
மூதேவி யாய்ப்பேசி மூடமதி யாகுவதே
ஓதாதார் தஞ்செயலா மோது. 207

மலையுள்ள கல்லை மதிப்பாக்கி வைத்துத்
தலைமேலே பூவகைகள் சாற்றி—நிலையாக
நின்றதனைப் பார்த்து நிலையாய் வணங்குறீர்
கண்டறிந்து அம்மைதக் கட. 208

பக்தர் முனிவர்களைப் பாடித் தொழுதுவர
சக்தி பெருகித் தரமுயர்வீர்—இத்தரையில்
அந்நார் பெயர்சொல்லி அன்புடநற் றுணமிடில்
பொன்னுன நற்பலனும் பேசு. 209

உள்ளத்திற் பத்தியின்றி யூரூராய்ச் சென்றங்கு
கல்லைத் தொழுவதனுற் கண்டதுண்டோ—உள்ளறிவால்
தெய்வநிலை தேர்ந்து தினமுந் தலைவணங்கு
உய்வதற் கம்மைதே யுயர்வு. 210

யீசனுக்கு மாந்தர் இனமாகச் செய்வதெல்லாம்
பாசமுடன் காண்பான் பரிவாக நேசமுடன்
எங்கும் பரந்தவனை எண்ணித் தொழுகைசெய
மங்களமே எங்கும் மதி. 211

காரணமுஞ் சூட்சுமமுங் கண்டுணர்ந்த பேருக்கிங்
காரணமும் வேண்டுவதோ ஆலமதில்—பேராகக்
காற்றோடு காற்றாய்க் கலப்பார் பரவெளியில்
ஆற்றலுடன் சுற்றிடுவா ராம். 212

மாந்தருக்கு மூன்றுநிலை மன்னருக்குக் கோடிநிலை
ஏந்தி அறிந்தாலே எண்ணிடலாம்—சாந்தம்
அறிந்தவரே காண்பார் அறியாதார் காணார்
புரிந்திருக்க கோடியதாம் புல். 213

பக்தியிலே வாழ்ந்தோர் பலருண்டு பாருலகில்
கத்தியிலே வாழ்ந்தோர் கணக்கிலராம்—புத்திதனை
நன்மைதரக் கூட்டி நடந்தார் நலனடந்தார்
புன்மைக ண்டார் மற்றோர் புரி. 214

மக்கந் தனைநாடும் மாந்தரே நன்றாக
மக்கத்திற் சென்றுவந்தே மாசறுமின் பக்குவமாய்
நன்றாய்க் குளித்துவந்தும் நற்புழுதி வீழுவதோ
குன்றாத நன்மைதனைக் கொள். 215

நன்றாக நல்லறத்தை நாடிப் புரியாதார்
உண்டான காசில் உவப்புடனே—நன்றுயர்ந்த
மக்கத்தை நாடிடினும் மாதவனின் நல்லருளை
பக்குவமாய் எய்துவரோ பார். 216

கத்தத்தை ஓதக் கடக்கின்றார் வேதியர்கள்
நித்தம் தொழுகாக்கால் நீதியுண்டோ—எத்தவரும்
பர்லதனைப் பேணார் பயனுடைய சுன்னத்தில்
அர்ளதனைக் காண்பாரோ வாங்கு. 217

சோற்றுக்கு நற்குழம்பு தோதாய் இருப்பதுபோல்
சாற்று முயர்தொழுகை தான்சோறும்—ஏற்றமுறு
சுன்னத்து நற்குழம்பு சோதிக்க வேநபிகள்
தன்னுரைக்கூட் டுக்கறியாந் தான். 218

கட்டம் நெருங்கிவரக் காரணனைத் தேடிநிதம்
இட்டமுடன் வேண்டி இருந்திடுவார்—கட்டமின்றேல்
எந்நாளுந் தேடார் இதயந் தனிலிருத்தச்
சொன்னாலுங் கேளார் சுவை. 219

மாயப் பணவாசை மாளாதே எக்காலும்
மாயப் பணத்தால் மதியிழந்து—மாயவனை
எண்ணாது வாழ்கின்றேன் எக்காலம் நாயனடி
உன்னிப் பிடிப்பேனோ ஓய்ந்து. 220

எப்பொழுதும் ஆலிம் இனிதாய் உரைப்பதனை
அப்படியே கேட்டிங் கழுதிடுவார்—செப்பியதை
அன்றைக்கே நீக்கியவர் ஆராத பாவவினை
என்றைக்குஞ் செய்வா ரிவர். 221

அக்காலு முண்டே அறிவுயர்ந்த மேலோர்கள்
இக்காலு முண்டே யறிவிலிகள்—எக்காலும்
நன்மைதனைச் செய்வோர் நலமுடையார் மற்றவர்கள்
கன்மனத்தார் புன்மனத்தார் காண். 222

அஞ்ஞானம் கீழாம் அளப்பரிய விஞ்ஞானம்
மெஞ்ஞானத் தின்கீழாம் மேவியறி—மெஞ்ஞானம்
என்றும் முதலாம் இதுவே இசைமுடிவாம்
நன்றுணர்ந்து நாளுமதைப் பேண். 223

பெற்றோர் உறவல்ல பிள்ளை உறவல்ல
உற்றோர் உறவல்ல உன்னிடுவாய்—கொற்றவனும்
நாயகனே நல்ல நலந்தருவான் நற்றுணையாம்
தேயமுழு தும்மவனைத் தேர். 224

வயிற்றுக் கலைகின்ற மானிடரே கேளீர்
மயிற்றுக்கு நேருங்கள் வாழ்வு—செயிற்றிறமாய்
மானம் பிழையாது வாழ்மின் இயலாக்கால்
ஈனமறச் செத்தொழிவீ ரிங்கு. 225

பொருள்வேண்டு மிங்கு புனிதமுடன் வாழ
அருள்வேண்டு மங்கு அறியின்—நிறைவுடைய
சொர்க்கநிலை எய்தத் தொடர்ந்தே யறமியற்றல்
இற்கடனு மென்றே யிசை. 226

நல்லருளைப் பெற்றோர் நலமாக அவ்வுலகில்
தொல்லையின்றி வாழ்வார் சுகிர்தமுடன்—புல்லரோ
நன்னரகம் வீழ்ந்து நடக்க வழியின்றி
புண்ணுறுவார் பார்த்திருக்கப் போய். 227

படத்தைக் கடவுளெனப் பார்த்திங்கு வேண்டல்
மடத்தனம தாகும் மனிதா—குடக்கிருந்து
ஆண்டவனை வேண்டல் அழகாகு மானதனால்
ஆண்டவனை இன்றே அறி. 228

கள்ளை மிகவருந்திக் கத்தித் திரிகின்ற
புல்லரே இஃது புதுமடமை—உள்ளவரை
போதைகளை யுண்டே பொழுதைக் கழிக்காமல்
மேதைகளாய் வாழ்வீர் மிக. 229

சத்திரத்தில் தூங்கிச் சடலங் கெடுக்காமல்
பத்தியொடு வேண்டப் பயனுண்டாம்—இத்தரையில்
வீண்பொழுது போக்கி விலங்குகளாய்த் தான்வழல்
காண்பரிய மாமடமை காண். 230

மனப்பேயைக் கட்டி மடக்கத் தெரிந்தார்
கணப்பொழுதுந் துன்புறுவ தில்லை—மனப்பேயே
துன்பத்திற் கெல்லாம் துணையிருப்ப தாதலினல்
கண்பொத்திக் கட்டுமனக் கால். 231

பள்ளிக்குப் போகப் பயப்படும் மானிடர்கள்
தொல்லை புரியத் தொடர்கின்ருர்—இல்லையிவர்க்
கென்னசொல்லி யாதுபயன் ஏற்றுந் திருந்தாதார்
மண்ணுக்குப் பாரம் மதி. 232

நாயகனே நீயின்று நாட்டிலுள்ள நல்லோரை
ஞேயமுடன் நேசித் திருக்கின்ருய்—பேயரோ
கண்டு வெறுத்துமிகக் கால்குதித்து ஓடுகிருர்
சண்டாள ராமென்று தான். 233

வேதத்தை ஓதியுளார் வேண்டுவன கற்றுள்ளார்
நீதத்தை காக்கும் நினைவின்றி—வாதத்தில்
காலத்தை ஓட்டிக் கடக்கின்ருர் வீண்பொழுதை
ஆலத்தைக் காணும லாங்கு. 234

எத்தனைதான் சொல்லி இனிதுரைத்த போதினிலும்
அத்தனையுங் கேளார் அறிவில்லார்—நத்தாமல்
தீமை மிகவியற்றித் தேசு கெடுத்தழிந்து
பேய்மைக் குணமடைவார் பின். 235

நாகரிக மென்று நடக்கின்ருர் தீயவழி
நாகரிகத் துட்பொருளை நாடாதார்—நாகரிகம்
பீடு தருநெறியைப் பேணுவதே யல்லாமல்
மூடநெறி பற்றுவதோ முன். 236

ஆட்சி முறைதழுவி அன்புடனே வாழ்ந்துவரக்
காட்சிபல கண்டு களிப்புறலாம்—சீச்சீ
அரசை அழிக்க அராசகந்தான் செய்தல்
முரசக் குணமாம் மொழி. 237

மக்கள் குணமறிந்து மாண்புடனே ஆட்சிசெய்வார்
எக்காலும் நற்புகழா லின்புறுவார்—மக்களுக்குத்
தொல்லை தருமரசு தூள்த்தூளாய் ஆவதல்லால்
விள்ளிய பேர்பெறுமோ ? விள். 238

மன்னவனே யானாலும் மாதவத்தோ ரானாலும்
முன்னவனின் அன்பின்றேல் மூதுலகில்—எண்ணரிய
சக்தி பெறுவாரோ தானறிந்து நாயனடிப்
பத்தி நெருங்கல் பயன். 239

கற்றவனே யானாலும் காலங்கை கூடாக்கால்
எத்திறத்துங் கீழடைந்து இங்கிருப்பான்—முற்றறிவு
இல்லாத பேயரெலாம் ஏற்றம் மிகப்பெறுதல்
சொல்லாரும் நல்லூழாற் சொல். 240

ஆண்டி யரசாள்வான் ஆட்சியுளான் கீழாவான்
வேண்டி எதுசெயினும் வெற்றியிலை—ஆண்டவனே
ஆக்குவோன் யாவும் அழிப்பான் அதனாலே
நோக்கிடுவீர் நுட்பம் நுகர்ந்து. 241

தன்மனத்தைக் கட்டத் தகுதிமிகப் பெருகும்
உன்மனத்தின் சக்தி உணராயோ—கன்மனத்தான்
பார்த்திருந்து நம்மைப் படுகுழியிற் றள்ளிடுவான்
சீர்த்திபெற நன்னிலையைத் தேர். 242

சிங்கார மானவனைச் சீர்த்திபெறத் தான்வணங்க
மங்காத நற்பலன்கள் வந்துவிடும்—பொங்கானு
பொங்கபதாய் எங்கும் பொருள்விளைவை ஆக்குவதும்
சிங்கார நாயனெனச் செப்பு. 243

நல்லகவி பாடி நலமாய் அளித்தாலும்
நல்லபடி நற்புலமை காணரே—புல்லரிதை
போற்ற நினைக்கவில்லை புத்திகெட்ட மட்டிகளால்
நாட்டுக்கு நன்றென் றிலை. 244

செல்வம் நிறைந்தக்கால் செப்பிடுவார் பந்தமெலாம்
உள்ளபடி செல்வம் உருக்குலைந்தாற்—றள்ளிநின்று
சுற்றத்தா ரானவரும் தூத்தூ வெனவெறுப்பார்
கெட்டார்க்குக் கேளிர் இலர். 245

வல்லவனை வேண்ட வகையான நல்லபயன்
தொல்லையின்றி கிட்டுந் தொடர்ப்பா—நல்லவர்கள்
இஃதறிந்து முன்னே இறைவனை வேண்டிபலன்
தஃதியுடன் பெற்றார் தனித்து. 246

எல்லாம் அவன்செயலால் இங்கு நடப்பதனால்
வல்லானை நீமறந்தால் வாழ்க்கையிலை—எல்லோரும்
உண்மை தெளிந்தே ஒருவனுக்கு நன்றிசெயச்
சென்மங் கடைத்தேறு மே. 247

நல்லகவி நான்பாட நாட்டமிகக் கொண்டுள்ளேன்
வல்லானே வந்தெனக்கு மாதிறமும்—உள்ளுயர்வும்
தந்தாள்வாய் நானும் தராவிட்டா லென்னுவேன்
வந்தாள் வரமருளி மற்று. 248

கோலை எடுத்தவுடன் கூறிவிடு நற்கருத்தை
நாளையென்று சொல்லி நடக்காதே—வேலையெலாம்
எப்பொருளை ஏற்றிங் கெழுத நினைப்பேனோ
அப்பொருளாய் நீமுன் னாய். 249

ஆலத்தைக் காத்துவரும் அன்புமிகு நாயகனைக்
காலத்தில் எண்ணிக் கருத்தாக—சீலமுடன்
வேண்டித் தொழுவாய் வினையற்றுப் போய்விடுங்காண்
தாண்டாதே விட்டிதனைத் தான். 250

நம்பித் தினந்தொழுவார் நம்பிக்கைக் கேற்றபடி
எம்பெருமான் யீசன் இனியவருள்—தெம்பாயீந்
தாள்வான் இதுமெய் அறியாதார் நம்பிக்கை
தாழ்வாகப் போகுந் தகர்ந்து. 251

வல்லவனை நம்பி வணங்கித் தினம்பணிய
அள்ளி யளித்திடுவான் நல்லருளை—உள்ளவரை
நல்லசெயல் நாட்டமுடன் நானிலத்தி லேசெய்யத்
தொல்லையகன் றின்பவருந் தேர். 252

சாதிமத பேதமின்றி யாருஞ் சமரசமாய்
மேதினியில் வாழ்ந்தால் மிகச்சிறப்பாம்—பேதமுறை
கொண்டு குடிகெடுக்க கொற்றவன்றன் மாசினத்தால்
துண்டாக்கித் தள்ளிடுவான் தூ. 253

ஈசனைர் நம்ப இருக்குதடா கோடி நலம்
தோஷமென்ற தீமை தொடராதே—சேமமுடன்
உள்ளத்துக்குள் நின்றே ஒளிரும் பரம்பொருளைச்
சொல்லுக்குள் வைக்கச் சுகம். 254

மாந்தரையே முன்பு மதிப்பாக ஆக்கியவன்
ஏந்தானிவ் வாறிடும்பை ஏற்படுத்தி—மாந்தரையே
வாட்டுகிறன் என்பீர்? மதிகொண்டு சிந்தித்தால்
ஏற்றம் அறிவீர் எடுத்து. 255

பலமுள்ள போதிங்கு பண்புடனே என்றும்
நலமுள்ள நாயகனை நாடி—உளமார
வேண்டிப் பணிந்தால் மிகுநன்மை கிட்டிவிடும்
தாண்டிவிடின் போகுந் தகர்ந்து. 256

வல்லானே என்னை வகையுடனே காப்பதனை
உள்ளுக்கு ளெண்ணி உணர்கின்றேன்—நல்லவனாய்
என்றென்றும் வாழ இனிய தவத்திருவே
கொண்டாள்வாய் என்னை குறித்து. 257

மானிலத்து மானிடரை மாறின்றி நீபடைத்தாய்
மானிலத்து மாந்தர் கணக்கறை—ஏன்நிலத்தில்
மேலென்று சில்லோரை மிஞ்சியுள பல்லோரைக்
கீழென்று சொல்லுகிறர் கேள். 258

மனக்கண்ணால் நம்மிறையை மாணவே பார்க்க
கணக்காக நன்மை கடுகும்—பிணக்கில்லா
ரூஹு இருக்களவும் இல்லல்லாற என்றேத
வாகாய நன்மை வரும். 259

ஈசன் ஒருவனையே ஏற்றமுற வேண்டிவரத்
தோச மகன்றேநற் றூயநன்மை—வாசிதரும்
சங்கதிக ளுண்டிதற்குச் சான்றாக காட்டுதற்கே
பங்கமின்றி ஞானிகளைப் பார். 260

தக்க முறையினிலே தற்பரனைத் தானறிய
மிக்க வழியுண்டு மேதினியில்—எக்காலும்
கண்மூடி வேண்டிடலாம் கண்ணியமாய் பார்த்திடலாம்
மண்மீதில் என்றும் மகிழ்ந்து. 261

நல்ல பலனளிக்கும் நாயகனை வேண்டாதார்
நல்ல சுகமின்றி நானிலத்திற்—றெல்லைபல
ஏற்பா ரதனாலே இறைவனடி யைத்தொழுது
பார்ப்பீர் பெருஞ்சோதிப் பண்பு. 262

தட்டான் உருக்கிவிடும் தங்கத்தைப் போல்மனத்தைச்
செட்டாய் உருக்கித் தினந்தொழுதால்—முட்டின்றி
நன்மை பலபெருகும் நானிலத்தில் வாழ்வுயரும்
சொன்னமுறை தேர்வீர் சுகம். 263

ஏழையென வின்றிருப்பார் ஏற்றமுறு வார்நாளை
மூளையின்றி நோதல் முறையில்லை—வேலை
தவறாது நாயகனைச் சங்கையுடன் வேண்ட
நவமான வாழ்வுண்டாம் நம்பு. 264

எவ்வேலை செய்தாலும் எண்ணி இறையவனை
செவ்வையுடன் வேண்டச் சிறப்பாகும்—எவ்வுயிரும்
இவ்வழியிற் சென்றால் இடும்பை அகன்றுவிடும்
கவ்வையின்றிச் சொன்னேங் கணி. 265

எண்ணத்தி லுண்டிங் கிறையவனின் ஞானமெலாம்
எண்ணத்தி லுண்டே இரக்கமெலாம்—எண்ணத்தை
நல்வழியி லாக்க நலமெல்லாம் ஒன்றாகப்
பல்வழியுங் கூடி வரும். 266

தத்துவங்க ளின்றிச் சடத்திற்கு நன்மையில்லை
வித்தகங்க ளின்றியிங்கு மேன்மையில்லை— இத்தரையில்
எல்லாம் இணைசேர்ந்தால் ஏற்ற நலனாகும்
இல்லையென்றால் தொல்லையுண்டென் றெண். 267

ஆதியிறை அன்றே அறிந்துநலத் தத்துவத்தை
நீதிமுறை யாக நிலத்தோர்க்குச்—சோதியுடன்
நல்ல திருவுயர நாடிப் படைத்திட்டான்
உள்ளறிவு கொண்டிங் குணர். 268

பற்றி இறையவனைப் பார்த்திருக்க எக்காலும்
சுற்றிவரும் நன்மை சுகமாக—இற்றரையில்
எந்நேர முந்தொழுகை ஏற்றுமே தற்பரனைக்
கண்ணேபோற் போற்றக் கருது. 269

சிந்தனையி லுள்ளவனைச் சீராக எப்பொழுதும்
உந்தன் நினைவினிலே உற்றுப்பார்—சந்தம்
முறையாது கூறியில் லல்லாஹ வென்றே
றையாக வேமௌனங் கொள். 270

விதிநிலையைத் தான்மாற்றி வெற்றிகண்டார் யாரும்
இதுவரையில் மேதினியி லில்லை—விதியென்றால்
ஈசனவன் சக்தி இதையாரும் மாற்றிவிடத்
தேசுடையா ரில்லை தெரி. 271

மதியென்றால் தன்னால் முடிந்துவிடுஞ் செய்கை
விதியென்றால் யீசன் விருப்பம்—சதியென்றால்
கள்ளர் செயலாகும் காரணங்க ளிப்படியே
உள்ளத்தி லுண்மைதனைக் காண். 272

அன்பாய் இசைப்பாடல் ஆயிரங்கள் யாப்பதிலும்
வெண்பா இசைப்பதுவே மேன்மையாம்—வெண்பாதான்
பாவிற் சிறந்த பயனுடைய நற்பாவாம்
நாவிற் கினிய நசை. 273

புண்ணியங்கள் செய்யாமற் பூரித் திருந்துதினம்
கண்ணியங்கள் ஒட்டக் கருதுகின்றார்—எண்ணிடிலோ
மேதினியில் இந்நவரே மேலான பாவமதை
ஆதிக்க மாய்க்கொள் பவர். 274

உண்டு மகிழாமல் உண்டியலில் சேர்த்திடுவார்
நன்று குடும்ப நலனுக்கும்—சென்றியார்
வேசையிடஞ் சென்று விளையாட்டாய்த் தான்கொடுத்து
தோசியெனப் புண்படுவார் தூது. 275

இன்றுநாம் பார்க்க இருக்கின்ற செய்கையிலே
குன்றனவே தீமைநின்று கொக்கரிக்கும்—மண்டுகளாய்
நாய்போலும் பேய்போலும் நானிலத்தி லேமாந்தர்
சாய்வோ டுழலுகிறார் தான். 276

பத்துரூபாய் தேடி பதினைந்தை விட்டுவிடில்
நத்திடுமோ இல்லறத்தில் நன்மைபல—உத்தமமாய்
கூடுதலாய்த் தேடிக் குறைத்துச் செலவழித்து
நாடுதலே யாங்குடிக்கு நன்று. 277

ஊதாரி யாகுவதால் ஒன்றும் பலனில்லை
சூதாகிப் போகும் துணையெல்லாம்—ஆதலால்
நன்நபியார் வாழ்க்கைமுறை நாடி இனிதறிந்து
இந்நகரில் வாழல் இயல்பு. 278

நண்பன் இடும்பைதனில் நன்றின்றி வாடுகையில்
அன்போ டவனுக் கடுத்துதவி—இன்புடனே
செய்யா தவனிங்கு சீர்கெட்ட நண்பனடா
வையகத்தி லந்நவனே மந்தி. 279

வண்ண முகத்தோடு வாழ்ந்த முகம்மதுவை
எண்ண மிகநன்மை இப்புவியில்—உன்னதமாய்
ஆதிச் சரித்திரத்தை ஆராய்ந்து பாராதார்
ஓதப் பிணமே உரை. 280

நல்ல முகம்மதுவை நாட்டமுட னேகாண
உள்ள சரித்திரத்தை ஓதப்பா—இல்லையெனில்
கற்றோ ரதைஓதக் காதா லதைக்கேட்டு
பற்றி நடக்கப் பயன். 281

கலியாணஞ் செய்யுங் கணக்கை யறிந்து
கலியாணஞ் செய்தல் கடனும்—கலியாணம்
என்றும் நிலைத்திங் கிருப்பதனு லேயஃதை
நன்றுக ஆய்ந்ததனை நாடு. 282

நல்லவர்போல் வந்து நயவஞ்சகஞ் செய்திடுவார்
சொல்வதனை நம்பிவிடல் தீதாகும்—கள்ளர்தான்
அன்றங் கிருந்தே யறிஞர் முகம்மதுவைக்
கொன்றெழிக்க வஞ்சகஞ்செய் தார். 283

வஞ்சகனை யீசன் மடக்கிக் கொடுநரகில்
அஞ்சலின்றித் தள்ளி அடைப்பதனுல்—வஞ்சகங்கள்
செய்ய நினையாதீர் தீவினைகள் மேவாதீர்
ஐயன் தருநிலைமை ஆய்ந்து. 284

பழக்கத்தால் மாந்தர் பலபிரிவாய் மாறி
இழுக்காக வாழுகிரு ரின்றும்—ஒழுக்கம்
நிறைந்தாலே நன்மை நிலைக்கும் நிறையாக்கால்
பொருந்தாத தீமை புகும். 285

நல்ல குடிப்பிறந்தார் நன்றறிந் தோதாக்கால்
கள்ளரோ டொப்பக் கருதுவரால்—நல்லபடி
கற்றோரே மேலோர் கணக்கறிவீர் கல்விநிலை
அற்றகுடி யன்றே கெடும். 286

ஆண்டிமக னேதியக்கால் ஆட்சி கிடைத்திடலாம்
வேண்டிப் படித்திட்டால் வெற்றியறி—தாண்டிப்
படிக்காமல் வாழ்ந்திடவே பாழாகும் வாழ்வு
கொடிக்காய் பறிக்காக் குறை. 287

பாமாலை பாடப் பரமனுக்கு நன்றாகும்
காமாலை பாடக் கணக்கில்லாத்—தீமைநிலை
உண்டாய மாதரொடிங் கூடாடி யேகெடுவார்
கண்டாய்ந்து பாடக் கடன். 288

காசுகளைக் கட்டிங்கு கஞ்சத் தனம்புரிவார்
வாசிநிலை யைக்காணு மாமடையர்—காசுகளை
நற்றொழிலுக் கீந்து நலன்தேடி வாழுவதே
இல்லறத்தார்க் கேற்ற இயல். 289

தன்னுடலை நம்பித் தரணியுளோர் வாழ்கின்றார்
உன்னுடலும் நாளை உடைந்தபின்பு—மண்ணகட்டிற்
செல்வதன்றி என்ன சிறப்புண் டதனாலே
நல்லமறை சொல்வழியை நாடு. 290

காட்டு நரிபோலக் காரியங்கள் செய்திங்கு
வீட்டு நலன்கெடுக்க வேண்டாமே—தேட்டமுடன்
நல்ல முறையோடு நானிலத்தில் வாழ்ந்துவர
உள்ளநலன் கூடும் உயர்ந்து. 291

நாயனைய நன்றியிந்த நானிலத்திற் கொண்டிருப்பின்
தாயனையான் நல்ல தகவுடையான்—பேயாக
நன்றிகெட்டு வாழ்வோன் நலமில்லாத் தீநரகில்
நின்று தவிப்பான் நினை. 292

கோபக் கனல்திரட்டிக் குன்றாகச் சேர்த்திடவே
சாபக் குணமுண்டு தானறியும்—கோபத்தைத்
தள்ளி அமைவுடன் தான்வாழ எக்காலும்
நல்ல பயனடைவீர் நாடு. 293

பொறுமையுடன் வாழப் புகழுண்டு வாழ்விற்
பொறுமைகெட மிக்கப் புரையாகும்—வறுமையிலும்
ஒக்கப் பொறையதனை ஓம்புவதே நன்றென்று
தக்கவர்கள் காண்பார் தரம். 294

பொய்யுலகில் நன்றாய்ப் புனிதமுடன் வாழ்ந்திடவே
மெய்யுலகில் நல்ல விளைவுண்டு—செய்கடனை
நன்றினிதாய்ச் செய்வோர் நலமெல்லாம் பெற்றுயர்வார்
பன்றியென வாழ்வார் பதர். 295

சோம்பேரி வாழ்க்கை துயரத்தை மிக்கியற்றும்
தீம்பாகும் வீம்பாகும் தேரிடிலே—சோம்பற்று
நற்றொழிலைச் செய்து நலமாக வாழுவதே
கற்றுயர்ந்தார் போற்றுங் கலை. 296

எல்லா வகையாலும் ஏற்புடைய நாயகனை
நல்லாத் தொழுதுவர நாடிடுவாய்—அல்லாக்கால்
அன்றுசெய்த நன்றிதனைக் காண்டவனுக் கேபிரதி
என்றுசெய்வாய் இங்கே இயம்பு. 297

வல்லவனை எண்ணி வகையாக நன்னெறியை
உள்ளவரை செய்ய உவப்பாகும்—பிள்ளையிலே
செய்யத் தொடங்குவதால் சீராகும் பத்திநெறி
மெய்யான மேன்மையது வின். 298

பன்றியைப்போல் பிள்ளை பலபெற்று நோகாமல்
கண்டுயர்ந்த பிள்ளை கணக்காக—இன்றுமுதற்
பெற்றுப் பெறுவொழ்வு பெற்றினிது வாழ்குவிரேல்
நற்றவத்தோ ரும் புவப்பார் நன்கு. 299

---

அளவுளதாய்ப் பிள்ளை அருமையாய்ப் பெற்றுத்
தலம்புகழ வாழுகின்ற தன்மை—உளவாமால்
கண்டுணர்ந் தேகுடும்பக் கட்டுப்பா டுற்றிருந்து
மண்டுபிறப் பைத்தடுப்பீர் மற்று. 300

தக்க பொருள்செதி தானிருப்பின் நான்கில்லாள்
பச்குவமாய்ச் சேர்ந்தின்பம் பண்ணிடலாம்—தக்கநிலை
இல்லாதார்க் கோர்பலை வி ஏற்படத்தா மாதலினல்
உள்ளமதி லிஃதை உரை. 301

முன்மனைக்குப் பிள்ளை முடிவாக இல்லையெனில்
பின்மனைவி யொன்றைப் பிரியமுடன்—நன்மனையாய்க்
கொண்டிருந்து புல்லிக் குலந்தழைக்கச் செய்வதுவும்
நன்றுயர்ந்த தாகும் நவில். 302

வல்லவனே சட்டம் வகையாகத் தந்துள்ளான்
தொல்லையின்றிக் காணத் தொடரப்பா—நல்லவர்கள்
யாரா இருந்தாலும் நாட்டமுடன் கண்டறிய
ஆராய்ந்து நன்மை யறி. 303

தெள்ளு தமிழ்மொழியில் தித்திக்குந் தேன்சுவையில்
வள்ளுவரும் நல்ல மறையளித்தார்—உள்ளுவந்து
நல்லமனத் தோடதனை நாட்டமுடன் ஓதிடவே
பிள்ளைமனந் தோன்றும் பிடி. 304

கண்ணுக்கு முன்னே கனிவாக வஞ்சமதாய்ப்
பொன்னான வார்த்தையிலே போற்றுகின்ற நன்மையிலான்
வாழ்க்கையெலாங் கெட்டு வறுமையிலே மிக்கழிந்து
ஏக்கத்தாற் சாவான் இடிந்து. 305

வார்த்தையிலே நஞ்சை வகையாக வேசேர்த்து
நேர்த்தியுடன் பேச நினைக்கின்றார்—சேர்ந்தே
உறவாடித் தீதுசெயு மொற்றர்சொல் லாய்ந்து
திருவோடு வாழத் தெரி. 306

கள்ள மனத்தோடு காணவரும் வஞ்சகரை
பிள்ளை நகைப்பாய்ப் பிரித்துவிடு—தொல்லுலகில்
வஞ்சகர்கள் மிக்க வளர்ந்திருக்கா ராதலினால்
சிந்தனையில் வாழ்க்கைதனைச் செய். 307

வண்ண உடையணிந்து வாகாக வேடமிட்டுத்
தின்ன உணவின்றிச் சீரழியும்—அந்நவரை
எந்நாளும் நம்பி இணைந்திருந்தே வாழாமற்
கண்ணா இருத்தல் கடன். 308

அன்பு மனத்தாலே ஆண்டவனை வேண்டிவர
பண்பு தினமுயறும் பார்த்தறிவாய்—துன்பத்தை
ஓட்டி விரட்டும் உயர்வழியி லேமுன்னோர்
தேட்டமுடன் சொன்னவழி தேர். 309

அன்பாலே இல்லறத்தில் ஆனந்தஞ் சேர்த்திடலாம்
அன்பாலே இவ்வுலகை ஆண்டிடலாம் – அன்பாலே
வெற்றி பெறலாம் வினைதீய்த்து வாழ்ந்திடலாம்
பெற்றியுட னேஇதனைப் பேண். 310

எவ்வகையி னுனாலும் ஏற்றவுயர் அன்புகொண்டு
செவ்வியுடன் பேசல் சிறப்பாகும்—இவ்வுலகில்
அன்புக்கு யாரும் அடிபணிந்து செல்வரால்
அன்புடனே நிற்க வறி. 311

அன்புமொழி கூட்டி அழகுறவே பேசுவதால்
துன்பமதை வென்றிடலாம் தப்புறவாய்—என்புருக
ஆண்டவனை வேண்ட அவனடியார் தான்வேண்ட
மீண்டிடலாம் துன்பம் மிதித்து. 312

வந்தாரை அன்பாய் வரவேற்க அந்நவரின்
சிந்தை குளிர்ந்துவிடுஞ் சீராக கந்தலுடை
கட்டி இருந்தாலும் கண்டவரை உண்மையுடன்
இட்டமுடன் அன்போ டிருத்து. 313

உண்ண உணவுதர உன்னிடத்தி லில்லாக்கால்
கண்ணைக் கசக்காதே காரணமாய்—உண்மையுடன்
வந்தவரை ஏற்று வடிநீரைத் தந்தாலும்
இந்திரலோ கத்தமுதா மெண். 314

கோபமது கொண்ட கொடுமனத்தார் தங்களையும்
தாபமுடன் அன்பாற் சரிசெயலாம்—கோபமற
அன்பு மொழிபேசு அஃதால் உனக்கென்றும்
இன்பங் கிடைக்கு மிணைந்து. 315

நன்நபியும் அன்பாலே நல்லுபதே சம்புரிந்தார்
முன்னவர்கள் யாவருமே முற்றுமன்பு—உண்மையுடன்
கொண்டு நடந்தார் குவலத்தியற் பீடுபெற
இன்று மிருக்கின்ரு ரெண். 316

அன்பிருந் தாலும் அடுத்தடுத்துத் தீமைவர
அன்புருகிப் போகு மதனுலே—இன்பநிலை
தீயா திருக்கத் திருச்செயலை செய்துநலன்
ஓயாது சேர்ப்பீ ருவந்து. 317

அடித்து வளர்க்காத பிள்ளைசில நாளில்
படித்துச் சிறக்காது பாரீர்—இடித்துரைத்துக்
கற்றுயரச் செய்தல் கடமையாம் பெற்றோர்க்கு
பற்ருகச் சொன்னேம் பதி. 318

பிறர்துன்பந் தீர்த்தாற் பிரியமுடன் யீசன்
உறவாக உன்னையுயர் விப்பான்—திறமாகத்
தன்ருல் இயன்றவரை தாரணியில் நன்மைகளை
எந்நாளுஞ் செய்திடவே எண். 319

மண்ணுலகில் எங்கும் மலிந்துள்ளார் ஏழைகளே
என்ன குறையென்று யாரறிவார்—மன்னவனும்
எல்லாம் சமமாக இப்புவியி லே படைத்தான்
கல்லாம லேனிருந்தார் காண். 320

கோபம் அதிகமுறக் கூறுகிற விவ்வார்த்தை
சாபமென வாகும் சரியன்று—பாவிகளே
என்னைச் சினவாதீர் இங்கிருக்கு மும்மறிவுக்
கண்ணைக் கெடுக்காதீர் காண். 321

பேசத் தெரிந்தவரே பேருலகின் நல்லவராம்
பேசத் தெரியாதார் பேயராம்—ஆசையுடன்
பேச்சு முறைபயின்று பேசுவீர் நன்ருக
நாச்சிறக்க வங்தே நலம். 322

நல்ல பிரசங்கம் நாடோறுஞ் செய்வோரைக்
கள்ளமின்றிப் போற்றிக் களிப்பிப்பார்—நல்லதிறன்
இல்லாரைக் கண்டிங் கிகழ்வார்காண் ஆதலினுல்
வல்லாண்மைப் பேச்சரிய வா. 323

நல்லபணி உள்ளோரை நாட்டோர்கள் வாழ்த்துவரே
உள்ள முயர்ந்த உணர்வதனுல்—எல்லோரும்
போற்றிப் பணிவாரே பூதலத்தி லிவ்விரண்டில்
ஏற்றுக்கொள் வீரொன் றினை. 324

ஆட்சிநலன் பேணி அரும்பணிகள் செய்வார்க்குக்
காட்சிநலன் காட்டிக் களிப்பிப்பான்-மாட்சிமைசேர்
மாதவனு மென்ருல் வரையாரோ நற்றெண்டர்
போதமுறு செய்கை புரி. 325

நண்பராய் நல்லோர் நயந்திருக்க எந்நாளும்
துன்பநிலை இல்லை தொடர்ந்தறிவீர்—அன்பாக
நல்லவரைத் தேடியே நட்புமுறை கொண்டிடுவீர்
விள்ளரிய தாகும் விரும்பு. 326

வந்த விருந்தினரை வாயினிக்க வேபேசிச்
சிந்தை குளிர்ந்திடவே செய்குவீர்—பந்தமுடன்
பேசி மகிழ்ந்திடவே பேரின்பங் கண்டிடலாம்
தோசியென மாறிற் றுயர். 327

கொஞ்சிப் பலவார்த்தை கூறியே வந்தவர்க்கு
கஞ்சி கொடுத்தாலும் கண்ணியமே—பஞ்சநிலை
விட்டிங்கு பாலமுத மீந்தாலும் நன்றுகா
ஒட்டி யுணர்வா யுவந்து. 328

நன்நெறியில் வாழ்தல் நலமாகும் இல்வாழ்க்கை
நன்னெறியைப் பேணுதார் நன்றறியார்—கண்ணெனவே
நன்னெறிகள் போற்றி நடப்பதுவே நாகரிகம்
நன்னெறியை நாடிக் கொளல். 329

அடக்கமுடன் இவ்வுலகில் ஆண்டவனைப் பேணி
நடுக்கமுடன் வாழ்வதுவே நன்மை—இடுக்கண்
நெருங்கிவிட்ட போதும் நினைப்பிறைமேல் வைத்திங்
கருஞ்செயலை யாற்றிடவே ஆய். 330

எத்தனைபேர் சேர்ந்திங் கிணைந்து நடத்திடினும்
உத்தமமாய் வேலை உயராதே - நத்தியிறை
சேர்ந்தருளைத் தானீய சீராகு மவ்வேலை
சார்ந்துவிடு மந்நவரின் ருள். 331

எடுத்த பெருமுயற்சி ஏற்றமதே யானல்
அடுத்திறைவ னுமிருக்க லாகும்—படுத்திட்டால்
ஒன்றும் நடக்காதே உண்மையிது நாட்டினிலே
கண்டே உழைக்கக் கடன். 332

நன்மையென வேநம்பி நாடி உழைத்தாலும்
நன்மை கிடைக்காது நாடியறி—தின்மைகள்
முன்வந்து நிற்கும் முயன்றதனைத் தான்யெதிர்க்க
பின்வந்து நிற்கும் பெயர். 333

சங்கடங்கள் பட்டுச் சரியாக உன்கடமை
இங்கியற்ற தேயிருப்ப தின்பமோ ?—சங்கையின்றி
எத்துன்பம் வந்திடும்பை ஏற்கவைத்த போதினிலும்
அத்தனடிப் பற்றில் அறும். 334

குறையாது வெஞ்சினத்தைக் கொண்டிருந்த போதில்
மறையாத துன்பம் வருமே—குறைந்தாலே
மன்னித் திறைவன் மகத்தான நன்மைபல
இன்னினியே யீவான் இசைந்து. 335

சொல்லுக் கினிமைதருந் தூய்மைமிகு நற்கவிதை
உள்ளே யிருந்துவரும் உண்மையுடன்—எல்லோரும்
ஈசன்மேற் பக்தி இருத்தி இருப்பாரேல்
ஆசுகவி பாடிடுவா ராய். 336

உழவுத் தொழிலியற்ற ஓம்புவதே நல்ல
வளமிக் குயிர்க்குறுதி யாகும்—அளவெல்லாம்
நேர்மைத் தொழிலல்ல நீணிலத்தி லெக்காலும்
சீர்மைத் தொழிலுழவாஞ் செப்பு. 337

கற்றுயர்ந்த நற்புலவன் காசினியில் மிக்கபுகழ்
பெற்றவனு மாவான் பிழையில்லை—சொற்றவனுங்
கற்றவனுக் கீடில்லை கண்டுரைத்த உண்மையிது
நற்றிறத்தோ டிஃதுணர நாடு. 338

காலைத் துயிலெழுந்து கண்டிப்பாய் நம்மிறையை
வேலையிலே வேண்ட விரிவாகிச்—சோலையென
வாழ்க்கை மலர்ந்து வசந்த மளித்திடுமே.
நோக்கிப் பனுவல் நுகர். 339

கோடி உடுத்திமலர் கொண்டையின்மேற் சூடியதும்
நாடி மனைபார்க்க நட்பாகுர்—கூடிருவர்
சந்தோசங் கொண்டு சரிமனதாய் வாழ்ந்துவரப்
பந்தம் மிகுந்திடுமே பார். 340

இறப்பைத் தடுக்கும் இயல்பறிமே லோரே
பிறப்பைத் தடுக்கவழி பெற்றார்—பிறப்பதனை
நீக்க இறைவன் நெடும்பதமே நல்லதுணை
நோக்கி இருப்பீர் நுணுகி. 341

விஞ்ஞான மென்று வெடிவகைகள் செய்யுகிருர்
விஞ்ஞான மெல்லாம் விரிவாகி—அஞ்ஞானம்
தன்னை அகற்றித் தகுதி பெருக்குவதே
விண்ணை அறிதவமாம் விள். 342

நாயகனு மொன்றென்று நாயகமு முண்டென்று
தாயகத்தி லோதத் தயாநிதியும்—நேயமுடன்
வந்து பலநன்மை வாழ்க்கையிலே தந்திடுவான்
சிந்தித்தே யோதித் தெளி. 343

எல்லா யிடத்தினிலும் யீசனருள் ஞாபகமாய்
உள்ளே இருத்திவைத்த உத்தமர்க்கு—வல்லவனும்
நல்லருளை யீவான் நபியொக்கு யீதாமல்
சொல்லியமை மிக்காஞ் சுகம். 344

நல்வினையுந் தீவினையும் நானிலத்திலே நமக்குக்
கொள்வினையாய் வந்தக் குணமாகும்—சொல்வினையை
நன்குணர்ந்து பேச நலமாகு மெவ்வினையும்
நன்குணர்ந்து செய்தல் நலம். 345

சித்தமுடன் வேண்டச் சிறப்பான நற்பலன்கள்
உத்தமனுந் தந்து உதவிடுவான்—எத்தவரும்
வேண்ட மறவாதீர் வெள்ளையுளத் தோடினிதாய்ச்
சான்றபுகழ் வாய்ப்பத் தகும். 346

கண்ணின்றிப் பார்ப்பவனைக் காதின்றிக் கேட்பவனை
மண்ணில் வேண்ட மதிப்பாகும்—உன்னதமாய்
நற்பயனைத் தந்து நலமுடனே காத்திடுவான்
எப்பொழுதும் வேண்டி இரு. 347

எவ்விடத்து முள்ளவனை ஏற்றமுடன் நீதொழுகச்
செவ்விநெறி பற்றித் திருவளிக்கும்—எவ்வளமும்
தேடி உனக்களிப்பான் சேதி இனிதறிந்து
ஓடு தொழுகைக் குவந்து. 348

முட்டாளாய் ஆனல் முயற்சியெலாம் வீணுகும்
திட்டமுடன் இன்றே தெரிந்துவிடு—கற்றறிய
ஞானமறை தேடி நபிமாரைச் சிந்தித்து
வேணமட்டும் நல்லறஞ்செய் வீர். 349

எண்ணி அனுதினமும் யீசனையே நீ வணங்கப்
பண்ணிப் பலநன்மை பாய்ந்துவரும் உன்னுள்ளே
வந்திருந்து எப்பொழுதும் மாவருளை மிக்கருளும்
எந்தக் கணமு மிணங்கு. 350

உன்னை ஒருவனென உண்மையுடன் நான்தொழுக
என்ன பலன்தருவாய் இங்கெனக்கே—அண்ணலே
அன்று நபிமார்க்கே ஆய்ந்தளித்தாய் நல்லருளை
இன்றுமதைப் போன்றே இயற்று. 351

ஆதியென வேயிருந்து ஆண்டுவரும் வல்லானே
நீதி எமக்களித்த நேயமுளாய்—சோதியுடன்
எந்நாளும் உன்னையாம் ஏற்றுப் புகழ்ந்துவர
எந்நாளும் நன்மனத்தை யீ. 352

கோடிப் படைப்புகளை கூட்டிப் படைத்தாயே
கூடியிங்கு வாழும் குறிப்பில்லை கேடிகளாய்
சாதிமதம் பேசிச் சதிவழக்கு மாடுகிறார்
நீதியிது வாமோ நினை. 353

என்று மிருப்பவனை ஏற்றமிகு நாயகனைக்
கண்டுத் தொழுவார்க்குக் காரணங்கள்—என்றும்
இருப்ப துறுதியென யீசனதின் வேதம்
பரப்பி வருவதனைப் பார். 354

எல்லாமும் நன்றாய் இயல்பாக வேபடைத்து
எல்லாமும் இன்புற் றினிதிருக்க—வல்லானே
வேண்டுவன செய்தாய் விளம்புமுயர் மாமதியும்
ஈண்டிரவுக் காக்கிறாய் எண். 355

உடலுக்குத் தக்க உயிரதனைத் தந்த
கடலுக்கு மிக்காங் கருணைக்—கடலே
உனக்குத் தெரியாத தொன்றுண்டோ வீங்கே
மணக்க எமது கவிமண். 356

யானைக்குத் தக்கபடி நற்கண் ணமைத்தேதான்
பூனைக்குத் தக்கவிழி பூவைத்து – மானுக்கும்
சிந்தித்து நன்னேக்குச் சேரப் படைத்தவனை
பந்தித்துப் போற்றிடுவோம் பாடி. 357

எவ்வழியில் இத்தனையும் எப்படிநீ செய்தாயோ
செவ்வையுட னிங்கதனைச் செப்பிடுவாய்—ஒவ்வொன்றுந்
தாந்தா மினிதாகத் தன்தொழில்கள் செய்திடுமா
ருய்ந்தமைத்த சூட்ச மறை. 358

ஓய்வான நேரமதில் ஓதிடுவீர் நன்னூலை
ஆய்வான நற்பொருளை ஆய்பின்னே —சாய்வாகப்
பேசும் முறைதவிர்த்தும் பேசரிய ஞானமதைக்
கூசாது கற்பீர் குறித்து. 359

தீயாரை நீக்கியே தெய்வம் அடியவரை
தூயாராய்க் காக்குந் துணையறிந்தும்—நாயகனின்
நல்லடிய ராகிநலம் பெறவே அஞ்சுகிறீர்
தொல்லுலக மாந்தீர் துவண்டு. 360

ஒன்ருய் இரண்டாக்கி யோர்மூன்ருய் நான்காக
நன்ருக்கி வைத்தான் நபிமாரைக்—கண்டறிய
வேதமதைக் காட்டி விளக்கிஞய் மாந்தற்காய்
நீதமுடை யோனை நினை. 361

அன்றிருந்தோர் ஒற்றுமையாய் அன்பாக என்றுமே
நன்றினிது வாழ்ந்து நலந்துய்த்தார்—இன்றுளரோ
மேலோர்கீ ழோரென்றே விந்தை பலபேசித்
தூளாகி விட்டார் துடித்து. 362

எத்தொழிலைச் செய்தாலும் எண்ணிச்செய் நாயகனை
அத்தொழிலில் நல்ல அருந்துணையாய்—உத்தமனும்
நின்றுபல வெற்றி நிலைக்க அருளுவதால்
என்றுமவன் நாமம் இனிது. 363

வம்பிழுக்க வீணாய் வளங்கெடுவாய் நாயனிடம்
வம்பிழுக்க என்றும் வளராதே—தம்பியே
நன்னீதி ஓதுகின்றேன் நன்றுணர்ந்தே எக்காலும்
உண்ணீர்மை கொண்டுயரு வாய். 364

பேரை முகம்மதெனப் பெற்றியுடன் வைத்துவிட்டால்
தேறி விடுவதில்லை தெய்வமிடம்—பேரைப்போல்
நாட்டமுடன் நம்மிறையை நாடவே நல்லபலன்
ஏற்றமுடன் கிட்டு மிணங்கு. 365

சிங்கார மானவனைச் செய்கையிலே மேலவனை
மங்காது நாளும் மனத்திருத்த--பொங்காள
மாகடலிற் சென்றாலும் மாண்புடனே வந்துதுணை
ஆகுநல மாங்கருளு வான். 366

தன்பொருளை உண்ணத் தனக்குமிக நல்லபலன்
தன்பொருளைப் பூட்டத் தனக்கதிலே—என்னபலன்
நல்லறத்துக் கீந்தால் நலமுடனே மிக்கபலன்
வல்லவனு மீவான் வளம். 367

அச்சமுட னிங்கே யளவறிந்து அன்னமிட
நிச்சயமாய் காப்பான் நிமலனவன்—பச்சமுடன்
நல்லறங்கள் நல்லவர்கள் நன்றினிது செய்துவர
உள்ளகுறை தீர்ப்பான் உவந்து. 368

ஆளறிந்து பேச அழகுடனே ஆறறிவைக்
காலறிந்து தந்தான் கடவுளுமே—ஆளறிவைக்
கண்டாங் குறவாடக் காலத்தே நல்லபலன்
நன்றிங் கினிதளிப்பான் நாடு. 369

உண்டவுடன் நல்லிறையை உன்னிப்பாய் எண்ணுவயேல்
கண்டவுடன் யீவான் கனிப்பொருளை—உண்டவனைத்
தான்மறக்கத் தீதே தனக்குணர ஓதுகின்றேன்
நீமறவா தேபணிந்து நில். 370

தொண்டுக் கிலக்கணமாய் தூயபணி நீயியற்று
கண்டபடி சுற்றல் களிப்பில்லை—கொண்டுபெருஞ்
சேவை புரிந்திடுவாய் செம்மலென வேயுலகம்
நாவை நலமாக்கும் நம்பு. 371

காமத்தால் வாடாதே கற்புக் கழகல்ல
காமத்தால் கெட்டோர் கணக்கிலராம்—காமமே
தீமை பெருக்குந் திருவழிக்கும் ஆதலினல்
காமக் கனல்தவிற்பாய் காண். 372

உத்தமனய் நீயிருந்தால் ஊரெல்லாம் போற்றிசெய்யும்
உத்தமனய் வாழ உறுதிகொள்வாய்--சித்தம்
உயர உயரும் உனதுபுகழ் என்றும்
அயரா தருநெறியைக் கொள். 373

நல்லறிவு நல்லகுணம் நல்லசெயல் நல்லநெறி
கள்ளவனத் தார்க்கேது கண்டிடுவாய்—நல்லவனே
வஞ்சமில்லார்க் கீதுவரும் மற்றவர்க்கிங் கேதுவரும்
தஞ்சமடை நன்னெறியைச் சார்ந்து. 374

பக்திவரும் ஞானநெறி பற்றிநின்றால் மேலான
சக்திவரும் இந்தச் சகமதிலே-பக்தியிலார்க்
கென்னவரும் தீய இடும்பைவருங் கேடுவரும்
உண்மையிது கண்டிங் குணர். 375

புத்தியுடன் ஓதிவரப் பூதலத்தில் நல்லறிவு
மெத்தப் பெருகிவரும் விந்தையதாய்-புத்தியுடன்
ஆராய்ந் தினிதோத அத்தனையும் நன்மனதில்
சீராகச் சேருஞ் செறிந்து. 376

பக்தியிலா தன்மனையைப் பாராம லேயோடிப்
புத்தியுடன் நல்லிறைவன் பொற்பதத்தை-இத்தரையில்
அண்டி இருந்தால் அவன் துணையே வாழ்வினுக்கு
கண்டபெரும் நற்றுணையாங் காண். 37?

நல்லா ரிடத்திலறி நன்மைபெறக் கல்விதனைப்
புல்லா ரிடத்திலிதைப் பேசாதே-வல்லானே
போதிக்க வல்லோன் புவிபோற்றும் நல்லாசான்
வாதிக்க நேரமில்லை வா. 378

நஞ்சை உளத்திருத்தி நட்பினர்போல் நம்மிடத்தில்
வஞ்சமுட னேபழகும் மாண்பிலரைத்-தஞ்சமென
எண்ணுதே தீதாம் இனிதான நட்பறிந்து
புன்னகையோ டாடல் புகழ். 379

நல்லபாம் பன்ன நயவஞ்ச முள்ளவர்கள்
சொல்லம்பு கொண்டே சுடுவார்கள்-கள்ளமிலார்
தம்மனதின் தன்மை தனையறிந்து நாயகனும்
வெம்மைதடுத் தாள்வான் விரைந்து. 380

நல்லோ ருடன்கூடி நாடுநகர் சுற்றிவர
உள்ள துணையாம் உணரப்பா- புல்லருடன்
சேர்ந்தால் துயர்வருமே சேராதே பாவமெல்லாம்
ஊர்ந்தே பெருகி விடும் ஓர். 381

கண்டாலே நண்பர் கடந்திட்டால் வம்பரவர்
உண்டாலே நண்பரென உள்ளுவார்-நன்றாக
வேண்டி யறிந்து விளக்கமுறு மேலோர்பால்
ஈண்டிக் கனிந்தறங்கள் எண். 382

கட்டையிலே போகுங் கருத்தை யறிந்திருந்தும்
நிட்டையைவிட் டேனோ நெறிகெட்டீர்-வெட்டையிலே
மங்கித் திரிந்து மதிகெட்டு வம்பினராய்ப்
பங்கப் படுவதுவோர் பார். 383

தற்காப்புக் காகத் தலையாய் அரண்மனையை
மிக்க உறுதியுடன் மேலாக்கி பக்குவஞ்சேர்
வீரத்தளபதியும் வீரரையும் ஒற்றரையும்
சேரவமைத் தல்லரசின் சீர். 384

மானமுடன் வாழ மதிப்புண்டிங் கெக்காலும்
மானமில்லார்க் கென்ன மதிப்புண்டு-நீணிலத்தில்
பொன்னூர் நெறிபேணிப் பூமிதனில் வாழ்ந்துவர
விண்ணோரும் போற்றுவராம் விள். 385

அன்பின்றி இன்பம் அணுவளவு மில்லையறி
அன்பிலே காதல் அரும்பிடுமே-அன்புயர
வையகமே போற்றி வரவேற்கு மன்புமனம்
உய்யக்கொண் டென்றும் உயர். 386

புத்தி இருக்குதெனப் போற்றுகிற ரிவ்வுலகில்
புத்தியென்ற லன்பே புரியப்பா—இத்தரையில்
எல்லாம் புலனுகும் ஏற்ற குணத்தாலே
வல்லானில் அன்பே மதி. 387

எத்தொழிலைச் செய்தே இருந்தாலு மிவ்வுலகில்
நத்தியுயர் அன்பால் நடந்துவர—உத்தமமாய்
நல்லபலன் கூடிடுமே நாணயங்கள் சேர்ந்திடுமே
உள்ள முயர்வமே யுணர். 388

அன்பிருப்பி னிந்த அவனியர்கள் வந்துன்னைத்
தன்பக்கம் ஈர்க்கத் தவமிருப்பர்—அன்பற்றால்
யாரும் மதியாரே ஆண்டவனுந் தான்மதியான்
பாரும் வெறுக்கும் படி. 389

ஒற்றுமையாய் வாழ உயர்ந்தவழி அன்புவழி
ஒற்றுமையே என்றும் உயர்ந்ததுணை—பற்றுதலாய்
சாதிப் பிரிவின்றிச் சன்மார்க்கம் போற்றிவர
நாதம் ஒளியெழுப்பும் நம்பு. 390

கோபம் நெருப்பாகிக் கொன்றுவிடு மன்பதனை
கோபம் கடுகளவுங் கொள்ளாதே—கோபமதால்
கொற்றவனும் வீழ்வான் குணத்தை இனிதறிந்து
நற்றிறமாய் வாழ்வாய் நனி. 391

சண்டைக் செவர்வரினும் சாந்தமுட னேபேசச்
சண்டைக்கு வந்தோன் சமரசமாய்—அண்டிவந்து
ஒற்றுமையாய் வாழ்வான் உலக நிலையறிந்து
பற்றுதலாய் வாழப் பணி. 392

வம்பு தொடர்ந்து வகைகெட்டுப் போகுவது
தெம்பில்லார் செய்கை தெரியப்பா அன்புடனே
பேசிப் பெருமைதனைப் பேணி நடந்தென்றும்
வாசி பெறுவாய் மகிழ்ந்து. 393

வாய்ச்சண்டை பொல்லாத மாகொலைக்கு வித்திடுமால்
வாய்ச்சண்டை தன்னை வளராதே—வாய்ச்சண்டை
சொல்லின் பொருள்விளங்காத் தூர்த்தநிலை யால்வருமால்
சொல்லும் முறையறிந்து சொல். 394

கோடிப் பொருள்கொடுத்துக் கூலி நிலம் பெற்றாலும்
பேடியென வாழாதே பெட்பில் பீடுடனே
நெஞ்சுயர்த்தி நின்றென்றும் நேர்மை தனைவளர்க்கப்
பஞ்சமதி லும்பணிசெய வாய். 395

மந்திரங்கள் கற்று மடமைவழி செல்லாதே
தந்திரத்தால் ஏழைபொருள் தட்டாதே-அந்தரத்தில்
நின்று தவிக்கும் நிலைக்கென்றும் போகாதே
நன்றுசொன்னேன் கண்டு நட. 396

அஞ்ஞானப் பேயுலகை ஆட்டிப் படைப்பதனால்
மெஞ்ஞானம் தேடும் விழைவின்றிப்-பொய்ஞ்ஞானம்
போற்றிப் புகழ்ந்து புவிமக்கள் வாழுகிறார்
மாற்றிவிட நாளும் மதி. 397

முட்டறுத்த ஞானம் முழுதுந் தெரிந்துவிடப்
பற்றறுந்து போகும் பரநிலையும்-கிட்டவந்து
போற்றிப் பணிந்துளக்குப் பொன்ரு இசை நலனும்
வீட்டின் கதியுந் தரும். 398

ஆறிரண்டும் ஒன்பதென ஆண்டனே சொன்ருலும்
ஊரிலுள்ளோர் ஒப்புவரோ ஒப்பாரே—பாரினிலே
தீநெறியை நன்மையெனச் செப்புமவர் செப்பலினை
வீணெனநீ நம்பு விரைந்து. 399

நல்லறிவோ டென்றும் நலம்வளர்க்கத் தீமையிலை
தெள்ளுதமி ழோதச் சினமில்லை-விள்ளரிய
தொண்டுபல செய்யத் துயரில்லை இல்லையே
விண்டவரைக் கண்டால் வினை. 400

நல்லதையும் கெட்டதையும் நாடி நலம்புரிந்து
அல்லலறுத் தானந்த மெய்திடுவாய்-உள்ளபடி
நன்றியற்ற வேயிந்த நானிலத்தில் நாம்பிறந்தோம்
கண்டறிதல் நண்மைக் கரண். 401

நல்லறிவு மிக்கோர்க்கு நாளும் துயரில்லை
அல்லறிவோர்க் கெப்பொழுதும் அல்லலுண்டு—நல்லறிவோர்
தாங்கண்ட மெய்யறிவில் தானடப்பார் புல்லறிவோர்
பாங்கொன்றுந் தேரார் படித்து. 402

யார்குடியில் வந்தாலும் எந்நிலையில் வாழ்ந்தாலும்
பேர்பெறுவார் நல்லறிவு பெற்றவர்கள் சீர்நிறைந்த
மன்னர் குடிப்பிறந்த போதினிலும் மாமூடன்
சொன்னதையார் கேட்பார் சுவைத்து. 403

புத்தியுள்ள நெஞ்சம் பரத்தை இனிதடையும்
சித்தியுள்ள மேலோர் சிறப்படைவார்—எத்ததியும்
மேன்மைக் குயர்வுண்டு மேலோர்க் கிசையுண்டு
தீமைக் கருத்துணர்வாய் தேர்ந்து. 404

சிற்றெறும்பு பல்காலும் சென்றூரக் கற்றேயும்
பற்றுடனே எப்பணியும் பண்ணிவர-வெற்றியது
கூடும் இதுவுண்மை கூடாதே எந்நலமும்
பீடறியா மேதியனர்க் கு. 405

அஞ்சி நெறிநடக்க ஆண்டவனும் அன்புகொண்டு
கெஞ்சி நலந்தருவான் கேட்பீரே-வஞ்சகத்தால்
தீய நெறியில் திரிவார் தமக்கிறைவன்
மாய விருந்தருள்வான் மற்று. 406

கஞ்சிக் கலந்து கடும்பசியில் நொந்தாலும்
விஞ்சையரும் போற்றும் விமலனை-நெஞ்சுருகிப்
போற்றிப் பணிமின் புவியீர் அதுகொடுமை
மாற்றும் மருந்தாகும மற்று. 407

இந்த வுடம்பொருநாள் இற்றுவிழும் மண்மீதில்
சொந்தபந்த மெல்லாம் தொடராதே-விந்தையிலே
சாவு வருமுன்னே தக்கவுயர் நல்லறங்கள்
மேவுவது நன்மை விளம்பு. 408

காரியங்கள் யாவும் கணக்குடனே ஆராய்ந்து
வீரியமாய்ச் செய்தல் வினைக்கழகு-தேறியிதன்
சூட்சமத்தைக் கண்டு தொடர்ந்து பணிபுரிந்தால்
மாட்சிவந்து கூடும் மதி. 409

மட்டற்ற நன்முயற்சி வையத் திகழ்வழிக்கும்
ஒட்டி நடத்தல் உயர்வளிக்கும்-பற்றுடனே
நட்பு முறைபேண நாளும் பலம்பெருகும்
பெட்புடனே வாழ்வாய் பெரிது. 410

நன்னிலத்தில் நல்விதையை நாட்டமுட னே தூவ
திண்ணமதாய் நல்விளைவைச் சேர்த்திடலாம்—அந்நதுபோல்
நல்லறிவால் நல் கிழவன் நற்கிழத்தி யோடுறைய
நல்லறிவுப் பிள்ளைபெற லாம். 411

பிள்ளைகளைப் பெற்றுப் பெருமைபெற வேவளர்த்தல்
நல்லதந்தை யார்க்கழகு நாடுங்கால்-உள்ளபடி
தந்தைக் கழகு தனயன் நலமுயர்த்தல்
எந்தமறைக் கூற்றும் இது. 412

மண்ணிற் பிறந்த மனிதரிற் கற்றோரே
கண்ணுடைய ரென்னுங் கருத்தறிந்து-இன்னினிதே
நல்ல கலைநுணுக்கம் நாடித் தினம்பயில்வீர்
வெல்லும் வகையி ∴ தாம் விள். 413

ஓதி உணராக்கால் ஒன்றும் பயனில்லை
ஓதி யறியார் உணர்வறியார்—ஆதலினல்
ஓதுவீர் பன்னூலும் ஓதுவீர் பல்கலையும்
ஓதுவீர் சாந்துணையும் ஓர்ந்து. 414

கற்றறிந்த மேலோர் களறுவரோ சாதிமுறை
கற்றறியா ரன்றோ களறுவார்-முற்றியமா
மூடர் வகுத்த முறையன்றோ சாதிவகை
நாடாதீர் இஃதை நனி. 415

எல்லா மறிந்தோமென் றிங்குசிலர் பேசுகிறர்
எல்லா மறிந்தாலே எப்போதும்-தொல்லுலகில்
வாய்திறந்து பேசாத மாஞானம் கூடிவிடும்
ஆய்ந்திதனைக் கண்டிங் கறை. 416

மண்ணுலக ஞானம் மனத்தடக்க வல்லார்க்கு
விண்ணுலகும் தன்னுலகாய் மேவிடுமே-எண்ணரிய
சித்தி யடைந்தார்க்கே சேருமிந்த மெஞ்ஞானம்
பக்தியுட னிஃதைப் பரப்பு. 417

எல்லா மறிந்த இணையற்ற ஞானியரின்
நல்ல பெயர்மறந்த நாசத்தால்-பொல்லாத
பஞ்சம் மிடிவறுமை பாரதனை வாட்டுதுகாண்
நெஞ்சிருத்து ஞானியர்நா மம். 418

குண்டலி ஞானம் குறிப்புடனே எய்தியவர்
தொண்செய்ய வேண்டுவதோ தொல்லுலகில்-தொண்டவர்தம்
கண்பட்ட தூரமெலாம் காணப் பரவிடுமால்
விண்டவரின் குண்டலினி மேல். 419

பத்தினிமை பேணும் பதமுணர்ந்த மங்கையரை
இத்தரையிற் சேனிசெய எண்ணுதே-பத்தினிமார்
சொல்லுக் கடங்குவாரே சொர்க்கத்து தேவரெனில்
விள்ளரிதே பத்தினி மேன்மை 420

ஏழையரின் பிள்ளையெலா மிவ்வுலகில் அஞ்சியழுங்
கோழையென வாமோ குறித்திடுவீர்-ஞாலமிசை
தொட்டபலன் விட்டபல னலே அறிவடையும்
திட்டமறி ஞானத் திசை. 421

கற்றறிந்த மேலோர் கணக்கறிய ஏழ்மைநிலை
பெற்றவரே யாவார் பெரிதுணர்மின்-மற்றிவரால்
மன்னவரும் அஞ்சி நடுங்கி வருந்தியரை
உன்னிடுவீர் நன்றே உணர்ந்து. 422

வந்தயிடம் நோக்கி மருளுதே நெஞ்சமது
சிந்தனையை விட்டுத் திரியுதே -பந்துதனம்
கண்நோக்கிச் சோருதே காலமெலாம் அந்தந்தோ
என்நோக்கி வாழ்வேன் இனி. 423

எல்லோரும் வல்லவிறை ஏற்றவுயிர் மக்களெனச்
சொல்லுதே வேதச் சுருதியெலாம்-கள்ளமின்றிப்
பேதங் கருதிப் பெரும்போர் புரியாமல்
சோதரராய் வாழச் சுகம். 424

நாணயமாய் வாழுகின்ற நன்மைத் திருவுடையார்
ஈனமடை யாரே இரும்புவியில்-ஆணவமாய்
நாணயத்தை விட்டால் நலிவடைந்து மாளுவரால்
நாணயமே நன்மைக் கணி. 425

நற்பெயரைக் கொண்டால் நலமுண்டு நானிலத்தில்
நற்பெயரைக் கொன்றால் நலமில்லை-உற்பவித்த
சீரார் பிறப்பிற் சிறந்தநிலை எய்தவெனில்
பேராரர் பெருமை பெறு. 426

நல்லோன் இவனெனவே நாட்டோர் புகழுவெண்ணம்
வல்லோனாய் வாழ வகைதேடு-தொல்லைதரும்
மூடனெனச் சொல்லும் முறைக்கிலக்காய் வாழாதே
பீடகன்று போகும் பெரிது. 427

வல்லமைகள் பேசி வரன்முடைகெட் டோடாமல்
நல்லவனாய் வாழ நலமுண்டே-உள்ளவரை
ஆதிநிலை யோர்ந்திங் கறமும் பொருள் நலமும்
ஏதுமின்றிச் சேர்ப்பாய் இனிது. 428

பக்திநெறி நிற்கப் பலநன்மை கூடிவரும்
பக்திநெறி மாறப் பலதீங்கே-யித்தரையிற்
சூழ்ந்தே உனைவருத்தும் தொல்லை அகலவெனில்
ஆழ்ந்தே இறைவணக்கஞ் செய். 429

நத்திப் பெரியோர் நலமான சொற்கேட்டு
இத்தரையில் வாழ இசையுண்டு-பித்தரைப்போல்
கட்டுக் கடங்காது கற்றோர் உரைமறந்தால்
குட்டுப்பட் டாழ்வாய் குழி. 430

காவியொடு தாடி கமலண்டலங்கள் கொண்டுசிலர்
பாவனைகள் பண்ணுகிறார் பக்குவிபோல்-நாவியவர்
சொல்லுஞ் செயலும் துரிசார் மனமுமென
விள்ளுமுறை கண்டு விலக்கு. 431

தோற்றப் பொலிவுகண்டு தொழுது பணிந்திடினும்
நோற்றநோன் பில்லாதார் நொய்மையரே-ஏற்றமது
உள்ளம் புறமும் துறந்தார் உறுவதல்லால்
கள்ளமுளார்க் கில்லை கணி. 432

நல்லவரும் அல்லவரும் நானிலத்தில் ஒப்படித்தாய்
மெல்லத் தெரிவார் விருப்புடனே-உள்ளியறிந்
தின்றே கயவரையே ஓடவிட்டு நல்லோரை
நன்றே மதித்து நட. 433

அன்றே உலகைப் படைத்தானோர் ஆண்டவனும்
இன்றே அவனின் இயல்பறிந்து-நன்றாக
வாழும் வகையறிய மானிலத்தில் தீமைநிலை
நாளும் பரக்குமென நாடு. 434

பெற்ற உடம்பின் பெரும்பயனைத் தேராமல்
வெற்றுடலத் தோடு விழிக்கிறீர்-முற்றாக
மக்கட் பணிசெயலே மாண்புடைய நற்பிறப்பின்
தக்க கடமையென் றெண். 435

புத்தியுள்ளார் பெற்ற புகழ்விளங்க நாளுைம்
சக்தி மிகப்பெருகும் தானறிவீர் புத்தியிலார்
பெற்றபுகழ் சின்னாளிற் பேதுற்று வீழ்ந்திடுமே
உற்றறிய நன்றும் உணர். 436

ஓதி யறியாமல் உண்மைநிலை காணாமல்
நீதி யறியாமல் நித்தமுமே-வாதுபல
பேசி உளறுகிறாய் பேச்சாளி போலிங்கு
தோசித் தனமிதனைத் தூர். 437

நாலைந்து புத்தகங்கள் நாடிப் படித்தவுடன்
வானைந்து டையார்போல் வாளாட்டி-நாலைந்து
பேரை அருகிருத்தப் பேசாத பேச்செல்லாம்
நூறைந்தாய் பேசுவார் நோக்கு. 438

இல்லாளுந் தானும் இணைந்தொன்றாய் வாழ்ந்துவர
உள்ளமதெலாம் நன்மை உணரப்பா-இல்லெனிலோ
நல்லறமும் நல்லொழுங்கும் நாட்டமுடன் நீயடைதல்
எள்ளளவு மில்லை இயம்பு. 439

காலத்தில் இல்லறவின் பங்கள் களித்துப்பின்
ஞாலத்தில் ஞான நலன்தேடல்-சீலத்தில்
சேர்த்துப்பே ரின்பங்கள் சேர்க்கும் இதையறிந்து
நோத்து நடக்க நினை. 440

எந்நாளும் சிற்றின்பத் துள்ளே இனிதிருந்து
பொன்னான வாழ்வைப்புண் ணாக்காதே-எந்நாளும்
சிற்றின்ப வாழ்வைச் சிறிதாக்கப் பேரின்பம்
பெற்றிடவே தான் முயலல் பெட்பு. 441

தன்பேர் நிலைத்திருக்கத் தக்க பணிபுரியும்
தன்வாழ் வினிக்கத் தகுதியுள்ள-நன்மனையும்
நல்லறிவார் பிள்ளைகளும் வேண்டும் நலங்கண்டு
சொல்லறிவார் போற்றுநெறி செல். 442

வெள்ளை மனத்துடனே வேண்டிப் பணிவார்க்குத்
தொல்லை யற்று சுகம்வருமே-நல்லிறைவன்
சொல்லரிய நல்லருளின் சொர்க்க நிலையறிய
வின்னரிய மேன்மை விளம்பு. 443

நானிலத்திற் காசுபணம் நாடித் திரட்டுகிறீர்
மேனிலத்தில் வாழ விரும்புகிறீர்-சூனியத்தைக்
கொண்டு திரிகின்ற கோதகலா மானிடரே
என்று திருந்திடுவீர் நீர். 444

முன்னோர் தவமாண்பால் மோன நிலை கண்டார்கள்
பின்னோர் அதைஎண்ணிப் பாராமல்-எந்நாளும்
கூத்து திரைப்படத்திற் கோடுகிறார் திண்டாடி
சீர்த்தநெறி இல்லையெனச் செப்பு. 445

ஆதி நபிமாரும் அந்நர்பின் வந்தவரும்
சோதிநெறி காணத் துடித்துடனே-மேதினியில்
நல்ல தவமுயற்சி நாடிப் புரிந்தாரே
புல்லரிதைப் போற்றுவரோ பே.சு. 446

தவத்தால் உலகம் தழைக்குஞ் சிறந்து
தவத்தால் அவர்கள் தவிக்கும்-தவத்தால்
மிக்கோரைத் தேடியவர் மேல்பிடித்துக் கால்பிடித்து
தக்கோனய் வாழுமுறை சார். 447

நபியாம் முகம்மதுவும் நானிலத்தில் ஹீரா
குவியா மலைநோன்பைக் கொண்டார்-நபிமாரே
இச்சகத்தில் மேன்மைபல எய்தினரே நற்றவத்தால்
அச்சமின்றி நீஏற்க ஆய். 448

அக்காலம் வாழ்ந்தார் அறிவுநிறை ஞானியர்கள்
இக்கால முண்டே இனிதறிமின்—பிற்காலம்
உண்டென் றுரைக்க வழியில்லை ஒருக்கால்
கண்டபடி சுற்றுதுல கம். 449

அந்தரங்கள் சுற்றி அலைந்தாலும் மண்ணுலகத்
தந்தரத்தில் நிற்றல் தகுதியாம்—மந்தரத்தில்
நின்று குதித்தார் நிலைகெட்டுச் சாவதல்லால்
சென்றுலவ லுண்டோவிண் செப்பு. 450

போக்கிரியாய் வாழ்ந்து புரைபெருக்கி நிற்பதனல்
சீக்கிரத்தில் வாழ்வுகெடும் தேரப்பா—நோக்கிநெறி
பற்றிப் பிடித்து பதமுணர்ந்து வாழ்வதனல்
வெற்றிமிகு மென்றே விரும்பு. 451

நண்பரெனச் சொல்லி நலமில் வழிகாட்டும்
துன்பர் தொடர்பைத் துரத்திவிடு—நண்பரெனில்
வாழ வழிகாட்டும் வாகு மிகுந்திருக்கும்
ஆழ வறியிதனை ஆய்ந்து. 452

போக்கிரிக்கு நீவழங்கும் பொன்னும் பொருளெல்லாம்
பேய்க்கு வழங்கும் பெருந்தனமாம்—ஆக்கமறிந்
தின்றே இறைபணிக்கிங் கேற்றவுயர் சான்றோர்க்கும்
நன்றே வழங்கி மகிழ். 453

கற்றுயர்ந்த மேலோர் கனிபணிசெய் நற்றெண்டர்
நற்றவங்கள் மேவுமுயர் ஞானவள்ளல்—முற்றுயர்ந்த
இந்நவரைப் போற்ற திருக்கின்றர் செத்தபின்பு
நன்னயமாய் போற்றுவதென் நாடு. 454

நாதர் முகம்மதையும் நானிலத்து மாமூடர்
பேதமைகள் சொல்லிப் பரிகசித்தார்—நாதர்மொழி
மானிலத்து மக்கள் தமை வாழ்விக்கும் போற்றறியா
வீணிலத்தார் தங்கொடுமை வீழ்த்து. 455

சிக்கென நல் லோர்மொழியைச் சேர்த்தப் பிடித்துயர்தல்
பக்குவம்பெற் றர்செய்யும் பான்மையதாம்—மக்களுக்
கென்ன புரியும் எதற்கெடுத்தா லுந்தீது
பின்னமின்றிச் செய்வார் பெரிது. 456

இன்பத்தின் எல்லை எதுவென் றறியாமல்
துன்பத்தில் வீழ்ந்து துடிக்கின்றர்—கண்ணிமைதான்
மூடித் திறக்குமுன்னே மூச்சறுந்து போகுநிலை
நாடித் தெரிவாய் நனி. 457

வல்ல இறையை மனத்தெண்ணி வாழ்வார்க்குத்
தொல்லைவருமோ தொடர்ந்துரைக்க—இல்லைஇல்லை
மேன்மைவருங் கேண்மைவரும் மேலான ஞானவரும்
தீமையிலா வீடுவருந் தேர். 458

சிங்காரப் பேரருளே செம்மையுள மாதவனே
மங்களஞ்சேர் தங்க மணமலரே—எங்களை நீ
நன்முறையிற் காத்து நலமருள நீமறந்தால்
சென்மங் கடைத்தேறு மோ ? 459

அண்டி நெருக்க அரவணைத்து இன்பூட்டும்
விண்டுரைக்க வொண்ணு விளங்கொளியே—கண்டபடி
சுற்றித் திரிந்து சுகமழியும் எங்களை நீ
பற்றி நெறிநடக்கப் பண். 460

ஒன்றை நினை நாளும் ஓர்மைகொள் எப்போதும்
நன்றை மறவாதே நானிலத்தில்—என்றென்றும்
இன்பமாய் வாழ இதுவழியாம் அல்லாக்கால்
துன்பநிலை மாறும் தொடர்ந்து. 461

நம்பினோர் என்றும் நலங்கெட்ட தில்லையடா
நம்பிவாழ் என்றும் நலமுண்டு—வம்பினோர்
பக்க மிருத்தற் பலமில்லை பார்புகழும்
தக்கவரால் நல்லிறைதாள் சார். 462

புன்மொழிகள் பேசப் புகழில்லை எந்நாளும்
நன்மொழிகள் பேச நலமாகும்—முன்னதாய்ச்
சிந்தித் தெதையும்நீ சீர்படுத்திப் பேசிவரச்
சுந்தரஞ்சேர் மேன்மைதொடரும். 463

வார்த்தை நலத்தின் மகிமை தெரிந்துரைக்க
நேர்த்தி பெருகி நிலைக்குமே வார்த்தையிற்
புண்படுத்தும் நோக்கம் புரையோடி நிற்குமேல்
கண்கெடுத்துப் பார்த்த கதை. 464

ஆதியின் நற்புகழை அன்றுடம் பேசிடுவாய்
நீதி நெறியின் நிலையுரைப்பாய்—தீது
கடியும் மொழிபுகல்வாய் கண்டார் புகழ்ந்து
படிமிசை போற்றிசெய் வார். 465

வல்லவனை நன்கு வணங்கித் தினம்வேண்ட
உள்ளபலன் கூடும் உறுதியாய்—எல்லோரும்
வேண்டுவீர் வேண்டி விளங்கிவாழ் வுற்றிடுவீர்
தூண்டும் விளக்காய்ச் சுடர்ந்து. 466

பஞ்சாயம் பேசிப் பலகுடியின் வாழ்வழிப்பீர்
எஞ்சாது தீமை இயற்றுவீர் —கொஞ்சமும்
நன்னோக்க மில்லா நலங்கெடுக்கும் பாவிகளே
பின்னோக்கி வாழ்வீர் பெரிது. 467

ஏழைக்கு மிக்க இடும்பை உருவாக்கும்
நாளைக்கடத்தா தினிதீவீர் வேலை
தவறிப்பின் செய்யும் தருமம் சிறக்கா
கவறின்றிச் செய்யறத்தைக் கண்டு. 468

கட்டு மனப்பேயை காலங் கடத்தாமல்
கிட்டும் பலநன்மை கீர்த்தியாய்—சட்டி
எடுத்தலைய நேர்ந்தாலும் என்றும் மறவா
தடுத்தடுக்கு உள்ளெழும் ஆசை. 469

எத்தீமை வந்தாலும் ஈசனடி வேண்டிவிட
அத்தீமை ஓடி அகன்றுவிடும்—முத்தி
முதல்வரும் மற்ற முனிவரும் சொற்ற
இதமான நன்னெறியீது. 470

சோற்றுலே இந்தச் சடலமது தான்திரண்டு
தோற்றப் பொலிவாய்த் திடமாச்சு—காற்றதுதான்
ஓடி வெளிச்செல்ல ஒன்றுக்கு மாகாமல்
காடகன்று வீழ்உடம்பை காண். 471

பொய்ச்சாட்சி சொல்வார் புழுவாய் பிறப்பெடுப்பார்
மெய்ச்சாட்சி சொல்வார் விளங்கறிவார்—செய்தவஞ்செய்
ஞானியராய் வந்து நலமார் பிறப்பெடுப்பார்
பேணியதைக் கண்டே பிடி. 472

இந்தச் சடலம் இனியதென் றெண்ணுமல்
நொந்தழுகிப் போகும் நிலையறித்து—சந்ததமும்
ஏற்றபணி செய்தே இசைகள் பெருக்கிடுவீர்
தோற்றப் பயனிதுவா கும். 473

புண்ணியங்கள் தேடப் புகழுண்டா மென்றறிந்து
புண்ணியங்கள் செய்வீர் புரிந்துணர்வாய்—கண்ணியத்தை
நன்மனத்தி லெண்ணி நமதுகடன் நாமியற்றல்
கன்மவினை தீர்க்குங் கடிது. 474

பற்றிப் பிடித்திறைவன் பாதம் பணிந்துவர
உற்றதுணை யாவான் உறுதியாய்—இற்றரையில்
தூலமுடன் வாழத் துணையாகி எவ்விடமும்
காலமெலாம் நற்றுணையா வான். 475

நல்லவரைப் போன்று நடித்துவரும் புல்லர் செயல்
நல்லா ரறிந்திடுவார் நாடுங்கால் —அல்லாவும்
வேடம் புனைந்துநல மேன்மை கெடுப்பவரை
மூட நரகிருத்து வான். 476

கள்ள மனத்துக் கயவர் தமக் குலகில்
நல்லருளை நீக்கி நடப்பித்தே—உள்ளளவும்
வாழ்வைக் கெடுத்துதீ மாருத துன்பளித்துப்
பாழ்நரகு தள்ளுமிறை பார். 477

அற்பர்க் குடன்பட்டே ஆணவங்கள் செய்யாமல்
பொறுப்புடையா ரோடிருந்து புண்ணியஞ்செய்-எப்போதும்
முற்றக் கனிந்த கனியுண்ப தேயறிவோம்
மற்றறிவோ காயுண்ப தெண். 478

கும்மிருட்டுச் சின்ன விளக்காற் குமிந்துகெடும்
செம்மனத்தார் முன்சிறியோர் சேர்ந்தழிவர்-உண்மையிது
நல்லோர் ஒருவர் உளரேல் அவரால் தீ
வல்லார் திருந்தலுண்டு மண். 479

நல்ல செயல்செய்ய நாட்டமிலா மானிடர்கள்
கள்ளச் செயல் கடிதியற்றி-தொல்லை பல
சேர்த்துக் களித்துத் திரிகின்றார் சின்னாளில்
ஆர்த்துவரும் துன்ப மவர்க்கு. 480

காசைப் பெருக்கக் கனதனங்கள் மிக்கியற்றி
ஆசைகொண்டு மக்கள் அலைகின்றார்-மாசையெலாம்
நின்றெனவே நம்பி நலங்கெடுவர் செய்கையைப்போல்
ஒன்றும் உலகி லிலை. 481

உள்ள வரைக்கும் உலகில் கலைபயின்று
தெள்ளத் தெளிந்திருத்தல் செப்பமாம்-அல்லாத
செய்கை எதுவும் சிறப்பில்லை கல்வியே
தெய்வ நிலையருளும் தேர். 482

அடியாரை நிந்தனைசெய் தன்பற்றி யோட்டத்
தடியாலே நானைத் தலைவன்-பிடித்துன்னைத்
துன்புறுத்தி வாட்டித் துயரப் பெருங்கடலில்
அன்பின்றித் தள்ளிமிதிப் பான். 483

முயற்சியுடன் செய்ய முழுவெற்றி உண்டு
முயற்சி தளர்ந்தால் முடங்கும்-உயற்சிபின்னார்க்
கண்டிடவே மாட்டாய் அளவறிந்தே என்றைக்கும்
நன்று முன்றுபணி நாடு. 484

குணங்குடிக்க நன்றே குவலயத்தில் என்றும்
குணங்குடியான் மண்டென்று கூறு-தினந்தினமும்
நன்னூலை ஓதி நமதிறையை வேண்டிவர
எந்நாளும் உண்டுநல னெண். 485

துன்மார்க்கந் தேடச் சகலநன்மை யுண்டாகும்
துன்மார்க்கந் தேடத் துயருண்டாம்-நன்மார்க்கம்
வேண்டியிறை வேண்டிவர மேலாம் பதம்பெறலாம்
ஈண்டிதனைக் கண்டு இயற்று. 486

மூன்றுலக மாக்கிட்ட மன்னவா நானுன்னை
வேண்டுகிறே னென்றும் வெறுக்காமல்-வேண்டுமுயர்
ஞானமதை ஈந்து நலமாக இவ்வுலகில்
மோனநிலை எய்த வருள். 487

இன்சொல் உரைக்கும் இதமான நல்லோரை
வன்சொல்லால் வாட்ட நினையாதே வன்சொல்தான்
வேலினும் வாளினும் மிக்கக் கொடுமையதாம்
சாலவிதை நீயறிந்து கொள். 488

நற்குணத்து நல்லோர்கள் நாளும் தீதகற்றி
நற்குணங்கள் மேவ நலஞ்செய்வார்-சற்குணங்கள்
இல்லாதார் நன்மைகெடுத் தென்றும் பிறர்தமக்குச்
சொல்லரிய தீதியற்று வார். 489

மெஞ்ஞானங் கண்ட விளங்கறிவார் மாதவர்கள்
அஞ்ஞானம் வீழ்ந்திங் கழிகுவரோ-மெஞ்ஞானச்
சான்றோர் உலகெங்குஞ் சுற்றிடினும் சால்பதனில்
ஈண்டு தவறுவரோ சொல். 490

நல்லதொண்டு செய்பவார்க்கு நல்லோர் துணையுண்டு
அல்லது முண்டிங்கே யாறலும் எள்ளளவும்
சேர்ந்து மயங்காமல் சுத்தமாய்த் தொண்டுசெய
மாந்தர் மதிப்பார் கதி. 491

கண்ணீர் விடுநிலையுங் கண்டிப்பாய் உண்டாகும்
மண்ணில் பொதுநலஞ்சார் மாண்பருக்கு-எண்ணியே
துன்பத்தை நக் கண்டு துவண்டு மயங்காமல்
இன்பமுடன் தொண்டுசெய எண். 492

தூதர் முகம்மதுவும் தொண்செய்து வாழ்ந்தனரே
மாதர் பலபேரும் மாண்டனரே-நீதமுடன்
நற்றொண்டு செய்ய நலமாகும் ஆதலினால்
நற்றொண்டு செய்ய நட 493

மார்க்கமுறை ஓதி மனிதரென வாழ்விக்கத்
தூக்கநிலை மாறித் தொடர்ச்சியாய்-ஆக்கமுடன்
எந்நேரம் எவ்விடத்தும் ஏற்றமுடன் யாவருக்கும்
நல் மார்க்கம் ஓதல் நலம். 494

நல்லோர் திருவுறவும் நல்லாசான் பேரன்பும்
உள்ளோர்க்குத் துன்பில்லை ஓதியறி-எல்லோரும்
இன்புற் றினிதிருக்க ஏற்றம் அறிந்தொழுகல்
அன்றிவே றென்று மில்லை. 495

வாயினிக்கப் பேசிடுவார் வஞ்சகங்கள் செய்தபணம்
நாயெனவே தானலைந்து நாடிடுவார்-பேயனையார்
பெற்றவுயர் செல்வம் பெருக்கம் சிறிதளவும்
உற்றதுயர் நீங்கா துயர். 496

தக்க படையின்றேல் தன்னொடு மாய்ந்து விடும்
தக்கபடை உண்டானால் தான்வெல்லும்-மிக்கோன்
இருந்து படைநடத்த எக்காலும் நன்மை
பரக்க வரும் அஃதே பணி. 497

வேலி நிலமிருந்தும் வேற்றூர்கை பார்த்துண்ணல்
போலிகளின் செய்கை புரிந்தறிமின்-மேழிப்
பலனறியா மூதேவி பக்குவமே செய்யான்
நிலனறிந்தான் நீள்புவிகாப் பான். 498

ஞான முள்வர்களும் நல்ல புலவர்களும்
பேணி உரைத்தமொழி பேணிடுவீர்-வீணிலிதை
ஞானமாய் எண்ணி இகழாதீர் பின்னுமையே
காலமெல்லாங் குத்துங் கதித்து. 499

மழைவாழி மண்வாழி மன்னுயிரும் வாழி
கலைவாழி கற்றவரும் வாழி பிழையகற்றும்
நாயகனும் வாழி நபிமாருந் தேவருடன்
ஆயமறை வாழி அமைந்து. 500

செந்துறை வெண்பா 1000 முற்றிற்று.

சுபம்.